# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

பிப்ரவரி—1979

மாசி





விலை

ரூ-1




ஸ்ரீராமகிருஷ்ண மடம்,

மயிலாப்பூர் :: சென்னை-600 004.

## ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன்

# மேற்கு வங்காள வெள்ள நிவாரணப் பணி

**மே**ற்கு வங்காளத்தைச் சேர்ந்த பல மாவட்டங்களிலும் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் துவக்கிய வெள்ள நிவாரணப் பணிகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

மால்தா, மூர்ஷிதாபாத், மிட்னப்பூர், ஹூக்ளி, ஹவ்ரா, பங்கூரா, 24-பர்கானாக்கள், கல்கத்தா முதலிய மேற்கு வங்காளத்தைச் சேர்ந்த மாவட்டங்களில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இதுவரை ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் அளித்த வெள்ள நிவாரண உதவிகளைப் பற்றிய கிடைத்த விவரங்கள் சிலவற்றிலிருந்து தயாரிக்கப்பட்ட அறிக்கை கீழே பொதுமக்கள் முன்பு சமர்ப்பிக்கப்படுகிறது. இது தவிர இன்னும் பல மாவட்டங்களிலுமுள்ள மிஷனின் வெள்ள நிவாரணக் கிளைகளிலிருந்தும் இறுதி அறிக்கைகள் வர இருக்கின்றன.

**இதுவரை விநியோகிக்கப்பட்ட பொருள்களின் விவரம்**

| | |
|---|---|
| புதிய வேஷ்டி, புடவை, லுங்கி, குழந்தைகளுக்கான உடைகளின் மொத்த எண்ணிக்கை | 13,000 |
| உபயோகிக்கப்பட்ட பழைய துணிகள் | 66,000 |
| புதிய கம்பளி போர்வைகள் | 3,000 |
| பால் | 1,95,000 Units |
| பருப்பு (வழங்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை) | 1,80,000 |
| சமைத்த உணவு (வழங்கப்பட்ட மக்களின் எண்ணிக்கை) | 25,00,000 |

சுமார் பன்னிரண்டு கிராமங்களுக்கு உடனடியாக மருத்துவ உதவியும் வழங்கப்பட்டது.

மேலும் புதிய துணிகளையும் கம்பளிப் போர்வைகளையும் விநியோகிக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறோம்.

சூழ்நிலைகளும் நிதி உதவியும் வசதியாக அமையுமானால் வெள்ளத்தால் மிகவும் பாதிக்கப்பட்ட சில கிராமங்களில் புதிய வீடுகளைக் கட்டி வழங்கவும் மிஷன் திட்டமிட்டுள்ளது. வங்காள முதலமைச்ச நிவாரண நிதியிலிருந்து பெற்ற ஒரு இலட்ச ரூபாயைச் செலவிட்டதைத் தவிர, ஏற்கெனவே ஐந்து இலட்சம் ரூபாய்களை மிஷன் இந்த வெள்ள நிவாரண ஆரம்பப்பணிகளுக்குச் செலவிட்டுள்ளது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் 19 வெள்ள நிவாரணக் கிளைகளில் உணவு சமைக்கப்பட்டு பாதிக்கப்பட்ட மக்களுக்கு வழங்கப்பட்டது. இவற்றில் 10 கிளைகளில் சமைக்கப்பட்ட உணவுக்குத் தேவையான அரிசியும் பருப்பும் மேற்கு வங்காள அரசாங்கம் வழங்கியது.

வெள்ளத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரண வேலைகளை மேற்கொண்ட மிஷனின் பணிகளுக்கு உதவி புரிந்த அனைவருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் தனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

**சுவாமி கம்பீரானந்தர்**
பொதுச் செயலாளர்

---

## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், பொன்மொழிகள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் முதலிய எதையும் தபால் மூலமே அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

**மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும் கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம்.** காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம் விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுதப்பட வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும். அவ்விதம் பதில் பெறாத அன்பர்கள், போதிய தபால் தலைகளை அனுப்பிவைத்துத் தமது படைப்புக்களைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறோம்.

ஆசிரியர்
**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

Acc.No. 38699

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்


| தொகுதி—59 | பிப்ரவரி 1979 | இதழ்—2 |
|---|---|---|


## பொருளடக்கம்

# வேண்டுகோள்

கடந்த நவம்பர் மாதம் 23, 24 ஆகிய தேதிகளில் இலங்கையில் வீசிய கடும் புயல் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளைப் பெரிதும் பாதித்தது. அவற்றுள் ஒன்ருக இலங்கை, மட்டக்களப்பு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளையும் பெரும் சேதத்திற்கு உள்ளாகியது.

மணிக்கு 140 மைல் வேகத்திற்கும் அதிகமாக வீசிய புயல் எந்த ஒரு வீட்டையோ மரத்தையோ சேதப்படுத்தாமல் விட்டு வைக்கவில்லை. ஆஸ்பெட்டாஸ் ஷீட்ஸ், கூரைகளில் வேயப்பட்டிருந்த ஓடுகள் ஆகியவை காய்ந்த சருகுகளைப் போல வீசியெறியப்பட்டன.

மட்டக்களப்பிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனின் கிளையாகிய அனுதை மாணவ-மாணவியர் விடுதிகளைச் சேர்ந்த கட்டிடங்களில், பிரார்த்தனைக்கூடம் நீங்கலாக ஏனைய எல்லாக் கட்டிடங்களும் பெருமளவில் பாதிக்கப்பட்டுள்ளன. ஆனால் தெய்வாதீனமாக உயிர்ச்சேதம் எதுவும் நேரவில்லை. இந்தப் புயலால் விடுதிக்கு ஏற்பட்டுள்ள நஷ்டம் ரூ. 7 லட்சம் என்று மதிப்பிடப்படுகிறது.

பின்வரும் பணிகளை மட்டக்களப்பு மிஷனின் கிளை உடனடியாகக் கவனிக்க வேண்டிய நிலையில் உள்ளது.

1. அழிந்த கட்டிடங்களைப் புதுப்பித்தல்.
2. ஏற்கனவே மாணவரில்லத்திலுள்ள மாணவர்களைப் பராமரித்தல்.
3. இப்போதைய புயலால் பாதிக்கப்பட்டு அனுதையாக்கப்பட்ட குழந்தைகளை ஏற்றுப் பராமரித்தல்.

இந்த நிறுவனத்தின் பொறுப்பாளராக உள்ள சுவாமிஜி அவர்கள், பொதுமக்களிடம் நிதி உதவி கோல விண்ணப்பித்துள்ளார்.

பண உதவி செய்ய விரும்புபவர்கள் 'ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004' என்னும் முகவரிக்கு அனுப்பி வைத்தால், அந்தத் தொகை மட்டக்களப்பு ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் மாணவர் இல்லத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.



# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை
—திருமூலர்

தொகுதி 59 | காளயுக்தி ஆ மாசி மீ | இதழ் 2




इदं ते युक्तं वा परमशिव कारुण्यजलधे
गतौ तिर्यग्रूपं तव पदशिरोदर्शनधिया ।
हरि-ब्रह्माणौ तौ भुवि दिवि चरन्तौ श्रमयुतौ
कथं शम्भो स्वामिन् कथय मम वेद्योऽसि पुरतः ॥

—शिवानन्दलहरी

இதம் தே யுக்தம் வா பரமசிவ காருண்யஜலதே
கதௌ திர்யக்ரூபம் தவ பதசிரோதர்சநதியா ।
ஹரிப்ரஹ்மாணௌ தௌ புவி திவி சரந்தௌ ச்ரமயுதௌ
கதம் சம்போ ஸ்வாமிந் கதய மம வேத்யோஸி புரதঃ ॥

—சிவானந்தலஹரீ

பரமசிவனே! கருணைக் கடலே! தங்களுடைய அடியையும் முடியையும் காண வேண்டும் என்ற கருத்துடன் பிரம்மா விஷ்ணு ஆகிய இருவரும் பறவையும் மிருகமும் ஆகிய பிராணிகளின் உருவத்தை அடைந்து ஆகாயத்திலும் பூமியிலும் அலைந்து களைத்தவர்களாயினர் மங்கலத்தை அளிப்பவரே! ஆண்டவரே! என் முன்னால் எப்படி இவ்வளவு எளிதில் கண்டறிவதற்கு உரியவராக இருக்கிறீர்கள்? இது உங்களுக்கும் பொருத்தம்தானா?

தேன்என இனிக்கும் திருவருட் கடலே
தெள்ளிய அமுதமே சிவமே
வான்என நிற்கும் தெய்வமே முல்லை
வாயில் வாழ் மாசிலா மணியே
ஊன்என நின்ற உணர்விலேன் எனினும்
உன்திருக் கோயில்வந் தடைந்தால்
ஏன்எனக் கேளாதிருந்தனை ஐயோ
ஈதுநின் திருவருட் கியல்போ?

- திருவருட்பா



# கடவுளைக் காட்டும் பாதைகள்

ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்
தலைவர், ராமகிருஷ்ண மடம்—சங்கம்

### தந்தையானாலும் தவம் செய்!

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளின் கருணை குறித்தும் மனிதர்களின் முயற்சி குறித்தும் அடிக்கடி சொல்லும் கதை ஒன்று உங்களுக்கு நினைவிருக்கும்.

அன்னை உமாதேவி இமயமலையரசன் இமவானின் மகளாகப் பிறந்து வளர்ந்துகொண்டிருந்தாள். முனிவர்களும் தேவர்களும் மகான்களும் இளம் பெண்ணாகிய அவளிடம் வந்து, அவளது தெய்விகத்தை உணர்ந்து, அவளை வாழ்த்தி வணங்கிச் சென்றவாறு இருந்தார்கள். இதைப் பார்த்த இமவான் ஒரு நாள் அன்னையிடம், ''என் கண்களுக்கு நீ வெறும் என் மகளாகத்தான் தெரிகிறாய். ஆனால் முனிவர்களும் தேவர்களும் நீ பராசக்தியின் அவதாரம் என்று சொல்லி உன் உண்மையான இயல்பைக் கண்டு போற்றுகிறார்கள். நானும் அவர்களைப் போல் உன் உண்மையான இயல்பைக் காண வேண்டும்'' என்றான். இதைக் கேட்ட உமாதேவி, ''என் உண்மையான இயல்பை நீங்கள் காண வேண்டும் என்றால், அந்த முனிவர்களும் தேவர்களும் என்னைக் காணக் கணக்கற்ற ஆண்டுகள், கணக்கற்ற பிறவிகள் தவம் செய்தது போல் நீங்களும் தவம் செய்ய வேண்டும். நான் உங்கள் மகளாகப் பிறந்துவிட்டதனாலே என் உண்மையான இயல்பை நீங்கள் கண்டுவிட வேண்டும்'' என்றால் அது முடியாத காரியம்' என்றாள்.

நம்முடைய ஆன்மிக வாழ்க்கையிலும் இதுதான் உண்மை. நாம் முதலில் நம்மால் ஆகும் முயற்சிகள் அனைத்தையும் செய்ய வேண்டும். அதன் பிறகுதான் தெய்வத்தின் துணை கிடைக்கும். இல்லையென்றால் ஒன்றுமே கிடைக்காது.

### எப்போது கடவுளை அடைவேன்?

ஸ்ரீராமகிருஷ்ணர் கடவுளை அடைவது குறித்துச் சொன்ன மற்றொரு கதையும் உங்களுக்கு நினைவிருக்கும். ஒரு முறை நாரதர் விஷ்ணுவின் வைகுண்டத்திற்குப் போய்க்கொண்டிருந்தார். வழியில் பகவானை அடையத் தவம் செய்துகொண்டிருந்த இரண்டு சாதகர்களை இரண்டு இடங்களில் கண்டார். நாரதர் வைகுண்டம் போகிறார் என்று தெரிந்ததும், இரண்டு பேரும் அவரிடம், ''நாங்கள் ஒவ்வொருவரும் விஷ்ணுவை அடைய இன்னும் எத்தனை பிறவிகள் தவம் செய்ய வேண்டும் என்பதை விஷ்ணுவிடம் கேட்டு வாருங்கள்'' என்று வேண்டிக்கொண்டார்கள்.

நாரதர் வைகுண்டத்திலிருந்து திரும்பி அந்தச் சாதகர்கள் இருந்த பாதை வழியே வந்தார். அவரைக் கண்டதும், இரண்டு சாதகர்களில் ஒருவர் நாரதரிடம், ''சுவாமி, நான் சொல்லி அனுப்பியதை விஷ்ணுவிடம் கேட்டீர்களா?'' என்றார். நாரதர், ''கேட்டேன்'' என்றார். ''பகவான் என்ன சொன்னார்?'' என்று ஆவலோடு கேட்டார் சாதகர். நாரதர், ''நீ கடவுளை அடைவதற்கு இன்னும் நான்கு பிறவிகள் எடுக்க வேண்டும்'' என்று சொன்னார். இதைக் கேட்டதும் அந்தச் சாதகரின் மனம் அப்படியே சோர்ந்து துவண்டு போய் விட்டது. அப்படியே உட்கார்ந்துவிட்டார்.

பிறகு நாரதர், அங்கிருந்து புறப்பட்டு அடுத்த சாதகரிடம் வந்தார். அவரும், ''சுவாமி, நான் கேட்டதை மகாவிஷ்ணுவிடம் நினைவாகக் கேட்டீர்களா?'' என்றார். நாரதர், ''ஆமாம், கேட்டேன்'' என்றார். ''நான் மகாவிஷ்ணுவை அடைவதற்கு இன்னும் எத்தனை பிறவிகள் இருக்கின்றன?'' என்று அவர் ஆவலோடு கேட்டார். அதற்கு நாரதர், அருகில் இருந்த புளியமரத்தைக் காட்டி, ''இதில் எத்தனை இலை இருக்கிறதோ அத்தனை பிறவிகள் எடுத்த பிறகுதான் நீ கடவுளை அடைய முடியும் என்று விஷ்ணு என்னிடம் சொன்னார்'' என்றார். இதைக் கேட்டதும் அந்தச் சாதகருக்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அந்த மகிழ்ச்சியை அவரால் தாங்க முடியவில்லை. இன்னும் எத்

தனையோ பிறவிகள் இருந்தாலும் நிச்சயம் ஒரு நாள் கடவுளை நாம் அடையப்போகிறோம் என்ற அள வற்ற மகிழ்ச்சியில் அவர் கூத்தாட ஆரம்பித்தார்.

அப்போது வானத்தில் எழுந்த ஓர் அசரீரிக்குரல், ‘‘மகனே! நீ இப்பொழுதே எல்லாப் பிறவிகளி லிருந்தும் விடுதலை பெற்றுவிட்டாய்’’ என்று கூறியது. அவர் விஷ்ணுவைச் சென்றடைந்தார்.

அந்தச் சாதகரின் உறுதியான நம்பிக்கையைக் கண்ட பகவான் மிகவும் மகிழ்ந்து உடனடியாக அவரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டார். ஆனால் மற்றொரு சாதகர் நான்கே நான்கு பிறவிகள் இருக்கின்றன என்று அறிந்ததும் சோர்ந்து போய் விட்டார்.

இவ்விதம் சாதனை செய்தாலும் கடவுளை அடை வது என்பது அவரது கருணையையே பொறுத்திருக் கிறது

### கடலும் குருவிகளும்

கடவுளின் கருணை எப்படிக் கிடைக்கிறது என் பதை விளக்குவதற்குப் பகவான் ஸ்ரீராமகிருஷ் ணரின் மற்றொரு கதையும் உள்ளது. இரண்டு குருவிகள் கடற்கரைக்கு அருகில் கூடுகட்டி வசித் தன. ஒரு முறை முட்டையிட்டு அந்தக் கூட்டில் வைத்துவிட்டு இரண்டு பறவைகளும் இரைதேடச் சென்றன. திரும்பி வந்து பார்த்ததும், கூட்டில் முட்டைகள் இல்லை. அவை இரைதேடச் சென் றிருந்த நேரத்தில், கரையில் இருந்த முட்டைகள் அலைகளால் கடலுக்குள் அடித்துச் செல்லப்பட்டு விட்டன.

இதைக் கண்ட குருவிகள் அப்படியே நிலை குலைந்து போயின. இறுதியில் கடல்நீர் முழுவதையும் இறைத்துவிட்டு, கடலுக்குள் இருக்கும் தங்கள் முட்டைகளை எடுக்கச் சபதம் செய்தன.

இரண்டு குருவிகளும் தங்களுடைய சின்னஞ்சிறு அலகால் கடலிலிருந்து துளித்துளியாகத் தண்ணீரை எடுத்துக் கரையில் கொண்டுவந்து தெளிக்கத் துவங்கின. விடியற்காலையிலிருந்து துவங்கிச் சூரி யன் மறைகிற வரையில் நாள் முழுவதும் அப்படியே தெளித்துக்கொண்டே இருந்தன. மறுநாளும் அப் படியே காலையிலிருந்து துவங்கிப் பகல் முழுவதும் அலகால் துளித்துளியாகக் கடல்நீரைக் கரையில் எடுத்துத் தெளித்தன. பிறகு இரவும் பகலும் தண்ணீரை அலகால் எடுத்துத் தெளித்துக் கொண்டே இருந்தன.

குருவிகளின் இந்தச் செயல்களைக் கடல்தெய்வ மாகிய வருணன் கண்டான். இதற்குக் காரணம் என்ன என்பதை அறிய விரும்பினான். கடலிலிருந்து எழுந்து வந்து குருவிகளிடம், ‘‘ஏன் இப்படி இரவும் பகலும் செய்கிறீர்கள்? என்ன காரணம்?’’ என்று கேட்டான். இதைக் கேட்ட பறவைகள், ‘‘இந்தக் கடல் அலைகள் எங்கள் முட்டைகளைக் கடலுக்குள் அடித்துக்கொண்டு போய்விட்டன. கடல்நீரை வற்ற வைத்துவிட்டு எங்கள் முட்டைகளைத் திரும்ப எடுப்பதற்காகக் கடல்நீரை இறைத்துக் கொண் டிருக்கிறோம்’’ என்றன.

வருணன் குருவிகளின் உறுதியையும் உழைப் பையும் கண்டு மிகவும் மகிழ்ந்தான். குருவிகள் செய்யும் காரியம் பயனற்றது என்று அறிந்திருந் தாலும் குருவிகளின் முயற்சியால் அவற்றினிடம் இரக்கம் கொண்டான். கடலில் விழ்ந்த முட்டை களைத் திரும்ப எடுத்து அவற்றினிடம் தந்தான்.

### முயற்சி இல்லாமல்

எனவே, முயற்சி எதுவும் செய்யாமல், மன மொன்றிக் கடுமையாக உழைக்காமல் வெறுமனே இருந்தால் கடவுளின் அருள் ஒருசிறிதும் நமக்குக் கிட்டாது. இது நிச்சயம். நாம் நம்மால் முடிந்த அளவு முயற்சியும் உழைப்பும் மேற்கொண்ட பிறகு தான் கடவுளின் உதவியை எதிர்பார்க்க முடியுமே தவிர, ‘நான் அவரிடம் சரணடைந்துவிட்டேன்’ என்று வாயால் சொல்வதனால் எதையும் பெற முடியாது.

### ஜனகரும் அவருடைய குருவும்

இறைவனைச் சரணாக அடைவது என்றால் என்ன என்பதை ஜனகர் வாழ்க்கையில் நடந்த ஒரு நிகழ்ச்சியின் மூலம் அறிந்துகொள்ளலாம். ஜனகர், அஷ்டாவக்ரர் என்ற குருவிடம் ஆன்மாவைப் பற்றிய ஞானத்தை அறிந்துகொள் வதற்காகச் சென்றார். அஷ்டாவக்ரர் அவருக்கு எல்லா உபதேசங்களையும் செய்து முடித்ததும், ஜனகர் தமது நாட்டிற்குத் திரும்புவதற்காகக் குதிரையின் மேல் ஏறி, ஒரு காலைக் குதிரையின் சேணத்தின் மேல் ஏறும் வார்ப்படியில் வைத்துக் குதிரையை ஓட்டத் தயாரானார். அப்போது அவரு டைய குரு அஷ்டாவக்ரர், ‘‘என் குருதட்சிணை எங்கே? குருதட்சிணை கொடுக்காமலே குதிரையின் மேல் ஏறிக்கொண்டாயே!’’ என்றார். உடனே ஜனகமன்னர், ‘‘என் குருதட்சிணையாக என்னிடம்

உள்ள எல்லாவற்றையும் என் நாட்டையும் என்னையும் எனது என்று இருக்கும் அனைத்தையும் தங்களுக்குக் கொடுத்துவிட்டேன்'' என்றார். அஷ்டாவக்ரர் அந்தக் குருதட்சிணைகளை ஏற்றுக் கொண்டு ஜனகரை அவரது நாட்டிற்குப் போகும் படி சொன்னார்.

ஆனால் ஜனகர் குதிரையின் சேணத்தில் ஒரு காலை முன்பு ஊன்றியிருந்த நிலையில் அப்படியே நின்றுகொண்டிருந்தார். அவர் குதிரையின் மேல் ஏறி அமரவே இல்லை. அப்படியே நெடுநேரம் நின்றுகொண்டிருந்தார். கொஞ்ச நேரம் கழித்து அவரைப் பார்த்த குரு அஷ்டாவக்ரர், ''என்ன விஷயம்? ஏன் இப்படியே நின்று கொண்டிருக்கிறாய்? உன் தலைநகரம் மிதிலைக்குப் போக வில்லையா?'' என்று கேட்டார்.

அதைக் கேட்ட ஜனகர், ''என்னால் எப்படிப் போக முடியும்? நான் என்னுடையதாக இருந்த அனைத்தையும் தங்களுக்குக் கொடுத்துவிட்டேன் என்னையே தங்களுக்குக் கொடுத்துவிட்டேன் எனவே எனக்கென்று ஒரு சுய விருப்பமும் இல்லை. எனவே குதிரையின்மேல் ஏறுவதற்கோ இறங்கு வதற்கோ, மிதிலை நகருக்குச் செல்வதற்கோ எனக்கு எந்த அதிகாரமும் இல்லை. எனவே அப்படியே நிற்கிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட அஷ்டாவக்ரர், ஜனகர் தந்த எல்லாவற்றையும் அவருக்குத் திருப்பிக் கொடுத்து, ''மிதிலைக்குப் போய் எனக்குப் பதிலாக அரசனாக இருந்து அதை ஆண்டு வா'' என்று அனுப்பினார்.

உண்மையான சரணாகதி என்பது இதுதான். நம்மை நாம் சரண் கொடுத்துவிடுவது என்பது விளையாட்டு அல்ல.

**கிரீஷ்சந்திரரும் சரணாகதியும்**

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தம் வாழ்வை நடத்திச் செல்லும் அதிகாரத்தைக் கொடுத்துவிட்டு அவரி டம் சரணாகதி செய்துவிட்ட கிரீஷ்சந்திர கோஷ் என்னும் சீடரைப் பற்றி உங்களுக்குத் தெரியும். ஸ்ரீராமகிருஷ்ணரிடம் தம் வாழ்க்கையை நடத்திச் செல்லும் அதிகாரத்தைக் கொடுத்துவிட்ட பிறகு அவர் அடிக்கடி, ''இப்படி இந்த அதிகாரத் தைக் கொடுத்து அவரிடம் சரணாகதி செய்து நான் படும் வேதனையைவிடக் கடவுளைக் காணப் பெரிய சாதனைகளில் நான் மூழ்கியிருந்தால் அது எவ்வளவோ சுலபமாக இருந்திருக்கும். என் விருப்பம் போல் ஒன்றையும் செய்ய முடியவில்லை. விருப்பம் போல் ஒன்றைச் சாப்பிடப் போனால், 'என் விருப்பம் போல் சாப்பிடும் அதிகாரம் எனக்கு இல்லையே! ஸ்ரீராமகிருஷ்ணரைக் கேட்டு அவர் சரி என்றதும்தானே சாப்பிட வேண்டும்?' என்ற எண்ணம் தோன்றும். விருப்பம் போல் எதுவும் சாப்பிட முடியாது. வேறு ஏதாவது ஒரு காரியம் செய்ய நினைத்தாலும், 'இதைச் செய்வதா வேண்டாமா என்று ஸ்ரீராமகிருஷ்ணர்தாமே நிர்ணயிக்க வேண்டும்?' என்ற நினைப்பு வரும். உடனே அந்தக் காரியம் செய்ய முடியாமல் நின்றுவிடும். ''எனவே, நான் ஸ்ரீராமகிருஷ்ணரைப் புகலாகப் பற்றி, எனக்காக எல்லாக் காரியங்களையும் நிர்ணயிக்கும் அதிகாரத்தை அவரிடம் கொடுத்துவிட்டது எனக் குப் பெரிய சோதனையாகவும் வேதனையாகவும் ஆகிவிட்டது'' என்றார்.

எனவே இறைவனிடம் சரணாகதராக நம்மைக் கொடுத்துவிடுவது என்பது நம்மால் சுலபமாகச் செய்யக் கூடிய காரியம் அல்ல. சரணாகதி என் பதன் அர்த்தத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளாமல் 'நான் எல்லாவற்றையும் பகவானிடம் கொடுத்து விட்டேன். நானாகச் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை' என்று வெறும் வாய்ப்பேச்சுப் பேசி நம்மை நாமே ஏமாற்றிக்கொள்ளக் கூடாது.

நம்மால் முடிந்த அளவு கடவுளை அடையப் பாடு பட வேண்டும். அதன்பிறகே கடவுளின் துணை நமக்குக் கிடைக்கும். இறுதியாக நம்மைக் கடவுளிடம் இட்டுச் செல்வது அவருடைய கருணையே தவிர, நம்முடைய முயற்சிகள் இல்லை. அதே நேரத்தில் நம்முடைய சுய முயற்சியும் உழைப்பும் இல்லாமற் போனால், கடவுளின் அருள் கிடைக்காது என்பதும் உண்மையாகும்.

(முற்றும்)



Srimat Swami Kailasanandaji Maharaj




## ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தரின் மறைவு

உலகம் தழுவிய ஸ்ரீராமகிருஷ்ண மடம்-சங்கம் ஆகியவற்றின் துணைத் தலைவராக விளங்கிய ஸ்ரீமத் சுவாமி கைலாசானந்தஜி மகராஜ் அவர்கள் 16 – 12 - 78ஆம் நாள் சனிக்கிழமை தமது 84-ஆம் வயதில் கல்கத்தாவில் மகாசமாதி அடைந்தார். அவருடைய மறைவால் இராமகிருஷ்ண இயக்கம் தனது ஆற்றல் மிக்க மிகப் பெரிய தலைவர்களில் ஒருவரை இழந்துவிட்டது. உலகம் உண்மையிலேயே ஓர் அற்புத உத்தம சன்னியாசியை இழந்துவிட்டது.

பூர்வாசிரமத்தில் சைலேஷ் என்ற பெயர் பூண்ட இவர் தற்போதைய பங்களாதேசத்தின் தலைநகரான டாக்காவில் நிறைந்த வசதிகளும் கல்வியும் பக்தியும் கொண்ட, பண்பாடு மிக்க குடும்பத்தில் பிறந்தார். அறிவாற்றல் படைத்த இவர் கல்லூரிப் படிப்பை முடித்தவுடன் டாக்கா பல்கலைக் கழகத்தில் வரலாற்றுப் பேராசிரியராக அமர்ந்தார். இளமை முதற்கொண்டே ஆன்மிக நாட்டமும் கடவுள் வேட்கையும் கொண்ட இவருக்கு ஸ்ரீராம கிருஷ்ணரின் சீடர்களில் ஒருவராகிய ஸ்ரீ பூபதிநாத் மகராஜ் என்பவரின் மூலம் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்துடன் தொடர்பு ஏற்பட்டது. அதன் விளைவாக, பேராசிரியர் வேலையை விட்டு நீங்கி, பேலூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் சேர்ந்து துறவற வாழ்க்கையை மேற்கொண்டார்.

இவர் மடத்தில் சேர்ந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணருடன் வாழும் பேறு பெற்ற அவருடைய நேர்ச் சீடர்கள் பலரும் உயிருடன் இருந்தனர். அவர்களோடு வாழவும் அவர்களுக்குத் தொண்டு செய்யவும் கூடிய அரிய தெய்விக வாய்ப்பு சுவாமி கைலாசானந்தருக்குக் கிடைத்தது. சுவாமி விவேகானந்தரால் மகாபுருஷர் என்று அழைக்கப்பட்டவரும், ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடருமாகிய சுவாமி சிவானந்தரின் அன்புக்கு உரிய சீடராக அமையும் பெரும் பாக்கியம் இவருக்குக் கிடைத்தது. அவரிடமே மந்திர தீட்சையையும் சன்னியாச தீட்சையையும் பெற்றார். பல ஆண்டுகள் அவருக்குத் தொண்டராகவும் செயலாளராகவும் பணி புரிந்தார். சுவாமி சிவானந்தரிடம் கொண்ட தொடர்பும் அவரிடம் பெற்ற பயிற்சிகளுமே துறவு மனப்பான்மையும் தொண்டு மனப்பான்மையும் கொண்ட உத்தம சன்னியாசியாக இவரை மாற்றி அமைத்தன. சுவாமி சிவானந்தரின் மறைவிற்குப் பிறகு சுவாமி அகண்டானந்தர் ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தின் தலைவரானார். ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடராகிய அவருக்கும் சுவாமி கைலாசானந்தர் சிறிது காலம் செயலாளராகப் பணிபுரிந்தார்.

1936-ஆம் ஆண்டு தலைமை நிலையம் சுவாமி கைலாசானந்தரை டில்லி ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் செயலாளராக அனுப்பியது. தமது அயராத உழைப்பாலும் மக்கள் சேவையில் தம்மையே மறந்து போகும் இயல்பாலும் டில்லியிலுள்ள மிஷனின் கிளைக்கு இவர் பெரும் சிறப்பைத் தேடித் தந்தார். இப்போது அங்கு மிகவும் சிறந்த முறையில் இயங்கி வரும் எலும்புருக்கி நோய்ச் சிகிச்சை நிலையமும் இவர் காலத்தில்தான் செம்மையாக அமைக்கப்பட்டுச் செயற்படத் துவங்கியது.

1944-ஆம் ஆண்டு இவர் சென்னை மயிலாப்பூரிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடம்-சங்கம் ஆகியவற்றின் தலைவராக நியமிக்கப்பட்டார். 1944-ஆம் ஆண்டிலிருந்து 1971-ஆம் ஆண்டு வரையில் 27 ஆண்டுகள் இவர் இந்தப் பெரும் பொறுப்பை வகித்து

அரிய பல தொண்டுகள் புரிந்தார். இந்த இருபத்தேழு ஆண்டுக் காலத்தில் சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடம்-மிஷன் இவற்றின் பணிகள் மிகப் பெரிய அளவில் வளர்ச்சி பெற்றன. மடத்துடன் இணைந்துள்ள இலவச மருத்துவமனை பெரிய கட்டிடத்தில் நவீன வசதிகளோடு விரிவாக்கப்பட்டது. நூல் நிலையமும் சொற்பொழிவு மண்டபமும் இணைந்த மிகச் சிறந்த கட்டிடம் சுவாமி விவேகானந்தரின் நூற்றுண்டு விழாவின்போது திறக்கப்பட்டது.

ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும் தரம் வாய்ந்த ஆன்மிக நூல்களை வெளியிடுவதில் சுவாமி கைலாசானந்தர் பெரிதும் ஆர்வம் கொண்டிருந்தார். இவர் காலத்தில்தான் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்தின் இதயமே போல் விளங்கும் **ஸ்ரீராமகிருஷ்ண கதாமிர்தம் (The Gospel of Sri Ramakrishna), ஸ்ரீராமகிருஷ்ண லீலா பிரசங்கம் (Sri Ramakrishna The Great Master)** ஆகிய இரண்டு நூல்களும் வங்கமொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டன. தமிழ், தெலுங்கு ஆகிய இரண்டு மொழிகளிலும் சுவாமி விவேகானந்தரின் எல்லா நூல்களும் மொழிபெயர்க்கப்பட்டு வெளியாயின.

வேதாந்த கேசரி (ஆங்கிலம்), ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் (தமிழ்) ஆகிய இரண்டு மாதப் பத்திரிகைகளோடு ஸ்ரீராமகிருஷ்ண ப்ரபா (தெலுங்கு) என்னும் பத்திரிகையும் துவக்கப்பட்டது. வேதாந்த கேசரியின் ஆசிரியராகவும் சுவாமி கைலாசானந்தர் 27 ஆண்டுகள் இருந்தார்.

ஏழை மாணவர்களுக்காக மயிலாப்பூரில் இயங்கி வரும் ஸ்ரீராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் தொழிற்கல்வி பயிலுவதற்குத் தொழிற்கூடம் ஒன்றை அமைத்தார். சென்னை ஜார்ஜ் டவுனில் மடம் நடத்தி வந்த பெண்கள் இடைநிலைப் பள்ளி சுவாமி விவேகானந்தரின் நூற்றுண்டு விழாச் சமயத்தில் உயர்நிலைப் பள்ளியாக வளர்ச்சி பெற்றது. தியாகராயநகரில் மிஷனின் சார்பாக ஆசிரியைப் பயிற்சிப் பள்ளி துவக்கப்பட்டது. சாரதா வித்யாலயா பெண்கள் உயர்நிலைப் பள்ளிகளும் மாணவர் உயர்நிலைப் பள்ளிகளும் மேன் மேலும் விரிவுபடுத்தப்பட்டன. இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தது போல் இன்று இரண்டாயிரம் மாணவர்களுக்குக் கல்வி தருவதும், தமிழ்நாட்டிலுள்ள மிகச் சிறந்த கல்லூரிகளில் ஒன்றுக விளங்குவதுமான விவேகானந்த கல்லூரி தோற்றுவிக்கப்பட்டது. சென்னை நகரில் மட்டும் இப்போது ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் சார்பாக நடத்தப்படும் கல்வி நிலையங்களில் சுமார் 35,000 மாணவ மாணவியர் கல்வி பயின்று வருகிறுர்கள்.

சுவாமி கைலாசானந்தரின் வாழ்க்கை துறவுக்கும் தூய்மைக்கும் தெய்விகத்திற்கும் எடுத்துக்காட்டாக அமைந்தது. இவரிடம் பயிற்சி பெற்ற துறவியர் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடம்-மிஷன்களின் கிளைகளில் பெரும் பொறுப்புகளில் அமர்ந்து சிறப்பாகப் பணியாற்றி வருகிறுர்கள்.

1971-இல் ஸ்ரீராமகிருஷ்ண மடம்-மிஷன் ஆகியவற்றின் பொருளாளராக நியமிக்கப்பட்டு, இவர் பேலூர் மடம் சென்றுர். நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு அதன் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவருடைய இந்த உயர்வு, பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரிடமும் தமது குருநாதராகிய சுவாமி சிவானந்தரிடமும் இவர் கொண்டிருந்த எல்லையற்ற பக்திக்கும் அளவிடற்கரிய நம்பிக்கைக்கும் மிகவும் பொருத்தமாக அமைந்தது.

சுவாமி கைலாசானந்தரின் பலவிதத் தெய்விகக் குணங்களில் சிறந்து விளங்கியது இவருடைய குரு பக்தி. தமது குருவாகிய சுவாமி சிவானந்தரிடம் இவருக்கு இருந்த பக்திக்கு ஈடு இணையே கிடையாது. ஒரு நாளில் குறைந்த பட்சம் அவரைப் பற்றியும் அவரது உபதேசங்களைப் பற்றியும் இருபது முறையாவது பேசுவார். பேலூரில் சுவாமி சிவானந்தருடன் இருந்தபோது அவரது சீடர்களில் சிலர் அவர் பக்தர்களுடன் நிகழ்த்திய உரையாடல்களைக் குறித்து வைத்தனர். அவை, 'கடவுளைத் தேடுபவர்களுக்காக' (For Seekers of God) என்ற பெயரில் நூல் வடிவில் வெளிவந்துள்ளன. இந்த நூலில் இடம் பெற்ற உபதேசங்களில் பெரும் பகுதியைக் குறித்து வைத்தவர் சுவாமி கைலாசானந்தரே ஆவார். இந்த நூல் கடவுளை நாட விரும்பும் பக்தர்கள் அனைவருக்கும் இன்றும் என்றும் கற்பகமரமாக விளங்கும்.

ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்துடன் இவர் கொண்டிருந்த ஆழ்ந்த அன்பும் நம்பிக்கையும் சகோதரத் துறவிகளுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் வகையில் அபாரமாக அமைந்திருந்தன. இவர் சென்னை மடத்தின் தலைவராக விளங்கிய போது, மடத்தின் சார்பாக நடத்தப்படும் விழாக்களில் ஏராளமான மக்கள் கலந்து கொள்ளும் வகையில் ஊக்கத்துடன் நடத்தி வந்தார். பல்லாயிரக்கணக்

கான மக்களுக்கு அன்னதானம் செய்யும் தரித்திர நாராயண சேவையை எண்ணற்ற தடவை மிகுந்த ஈடுபாட்டுடன் முன்னின்று நடத்தியிருக்கிறார். வேதாரண்யம் புயலின்பொழுது ஸ்ரீராமகிருஷ்ண மடம் இவரது தலைமையின்கீழ்த் தமிழகமே போற்றும் வகையில் நிவாரணப் பணி புரிந்திருக்கிறது.

ஸ்ரீராமகிருஷ்ணரிடம் கொண்டிருந்த பக்தி, துறவு, தூய்மை, எளிமை, பிறரிடம் கொண்டிருந்த சுயநலக் கலப்பற்ற உண்மையான ஆழ்ந்த அன்பு ஆகிய இவரது பண்புகள் என்றைக்குமே மறக்க இயலாதவை. இவரிடம் அந்தரங்கச் சுத்தமாக இருந்த இந்தப் பண்புகளே துறவிகளின் உள்ளத்திலும் பக்தர்களின் உள்ளத்திலும் இவருக்கு நிலையான உயர்ந்த தனியிடத்தைப் பெற்றுத் தந்துள்ளன.

இவருடைய தொடர்பு காரணமாக மடத்தின் பக்தர்கள் மேன்மேலும் ஆன்மிக வாழ்க்கையில் பெருத்த ஈடுபாடு கொண்டனர். பல இளைஞர்கள் ஸ்ரீராமகிருஷ்ண இயக்கத்தின்பால் ஈர்க்கப்பட்டு மடத்தில் சேர்ந்து துறவற வாழ்க்கையையும் மேற்கொண்டனர்.

சுவாமி கைலாசானந்தர் முதல் தரமான ஆத்ம சாதகர்களில் ஒருவராக விளங்கினார். பல விதப் பொறுப்புக்களுக்கு இடையிலும் இவர் ஆத்மசாதனங்களைத் தவறாமல் காலையும் மாலையும் பழகி வந்தார். அது போலவே மடத்தைச் சேர்ந்த சாதுக்களும் பக்தர்களும் தவறாமல் ஆத்மசாதனம் பழக வேண்டும் என்பதில் இவர் மிக மிகக் கண்டிப்புடன் நடந்துகொண்டார். ஜபம், தியானம் பழக வேண்டிய தருணங்களில் யாராவது வீண் பேச்சில் ஈடுபடுவதைக் கண்டால் இவருக்கு வெகுவாகக் கோபம் வந்துவிடும்.

மடத்துச் சாதுக்களிடமும் பக்தர்களிடமும் அன்பு காட்டுவதில், இவர் தாயாகவும் தந்தையாகவும் விளங்கினார். இவருடன் பழகிய ஒவ்வொருவரும் இவருடைய அன்பு அந்தரங்க இதயத்திலிருந்து வருவது என்பதை உணர்ந்திருந்தார்கள்.

இவர் சென்னை மடத்தின் தலைவராக இருந்து மடத்தை நிர்வகித்த முறை ஒரு தெய்விகச் சூழலை உருவாக்கியிருந்தது. மடத்திற்கு வருவோர் பிரசாதம் பெற்றுத்தான் செல்ல வேண்டும்; ஏராளமான மக்கள் மடத்திற்கு வரவும் போகவும் இருக்க வேண்டும் என்பது இவருடைய எண்ணம். அந்த எண்ணத்தின்படியே மடத்தை நிர்வகித்து வந்த இவர், யாராகிலும் சிறிது காலம் மடத்திற்கு வராவிட்டால் அவர்களைக் குறித்து விசாரித்து அனுப்புவார். அவர்களை நேரில் காணும்போது மடத்திற்கு வராததற்காகக் கோபித்துக் கொண்ட தருணங்களும் உண்டு. அதற்குக் காரணம், மடத்துக்கு வருவது காரணமாக அவர்களுக்கு ஆன்மிக வாழ்க்கையில் ஆழ்ந்த ஈடுபாடு ஏற்பட வேண்டும் என்பதே ஆகும்.

எப்படிப்பட்டவரும் இவரிடம் நெருங்கி ஒருசிறிதும் தயங்காமல் தமது உள்ளத்தில் இருப்பதை எடுத்துச் சொல்வார்கள். அதற்குக் காரணம், இவர் பிறரிடம் கொண்டிருந்த அன்பும் எளிமையுமே ஆகும்.

மயிலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தை இவர் தென்னிந்தியாவிலுள்ள எல்லா மடங்களுக்கும் தாய்மடமாகக் கருதினார். அதற்கு இயைந்த வகையிலேயே இவர் வாழவும் மடத்தை நிர்வகிக்கவும் செய்தார்.

பல்லாண்டுகளுக்கு முன்பு தாம் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களுடன் பழகியதை அடிக்கடி இவர் நினைவுகூர்ந்து சொல்வது வழக்கம். முதிய துறவியரைப்பற்றியும் ஸ்ரீராமகிருஷ்ண மிஷனைப் பற்றியுமான பழைய வரலாறுகளையும் இவர் அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பார். ஒழுங்கு முறைகளைக் கடைப்பிடிப்பதில் மிகுந்த கண்டிப்புடன் இருந்ததோடு, அதே அளவுக்கு இவர் நகைச் சுவையுடனும் அன்பர்களுடன் உரையாடுவார்.

ஸ்ரீராமகிருஷ்ண மடம்-சங்கம் ஆகியவற்றின் துணைத் தலைவரான பிறகு இரண்டு தடவை இவர் சென்னை வந்தார். இரண்டு தடவையும் மக்களுக்கு மந்திரதீட்சை வழங்கினார். கடைசியாக இவர் 1978 ஆகஸ்ட் மாதத்தில் சென்னை வந்து ஒரு மாதகாலம் தங்கியிருந்தார். அப்போதே இவரது உடல்நலம் குன்றத் தலைப்பட்டிருந்தது.

துணைத் தலைவரான பிறகு, ஸ்ரீராமகிருஷ்ணர் தமது உடலை உகுத்த காசிபூர் ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் கிளையில் கடந்த நான்கு ஆண்டுகளாக அடிக்கடி இவர் சீடர்களுக்கு மந்திரோபதேசம் வழங்கினார்.

சுவாமி கைலாசானந்தஜீ மகராஜ் மறைந்த ஒரு வாரகாலத்திற்குப் பிறகு, இவருடன் நெருங்கிப் பழகிய அன்பர்களில் ஒருவரான திரு மஞ்சுநாத்

பாய் மடத்திற்கு வந்திருந்தார். அப்போது இந்தக் கட்டுரையை எழுதும் எண்ணம் இருந்தது. அவர் சொன்னார்: "சுவாமி கைலாசானந்தஜி மகராஜ் இறந்து போய் விட்டதாகக் கூறுகிறார்கள். ஆனால் அதை நான் நம்பமாட்டேன். அவரைப் போன்ற மகான்கள் முற்றிலும் வேறு ஓர் உலகத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்கள் எப்போதுமே வாழ்ந்து கொண்டிருப்பார்கள்; அவருடைய சாந்நித்தியத்தை இப்போதும் நாம் உணர்கிறோம் அல்லவா? அவர் எனக்குத் தாயாகவும் தந்தையாகவும் குருவாக வும் எஜமானராகவும் இருந்தார். என்னை அவர் மடத்தைச் சேர்ந்த ஒருவனாகவே கருதினாரே யன்றி, வேற்று ஆளாக ஒருபோதும் கருதியதே இல்லை. நானும் அவருக்குத் தளராமல் என் சக்திக்கு உட்பட்ட அவ்வளவையும் ஒரு வேலைக் காரனைப் போல இருந்து செய்தேன்" என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசிக்கொண்டே இருந்தார்.

சுவாமி கைலாசானந்தரின் வாழ்க்கை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த ஒரு துறவி எப்படி வாழ வேண்டும் என்பதற்கு முன்மாதிரி யாக அமைந்த ஓர் அற்புத வாழ்க்கை ஆகும். இவரைப்பற்றி ஒரே வார்த்தையில் சொல்வ தென்றால் **குருபக்தி** என்றுதான் சொல்ல வேண்டும். இவர் வாழ்க்கையில் பெற்ற ஒவ்வொரு வெற்றிக்கும் இவருடைய குருபக்தியே முக்கியக் காரணமாக இருந்தது.

ஸ்ரீராமகிருஷ்ணர் மயமாக வாழ்ந்தவர், ஸ்ரீராமகிருஷ்ணருடனே வாழ்ந்தவர், இப்போது ஸ்ரீராமகிருஷ்ணரிடமே சென்றுவிட்டார். பறவை தன் சொந்தக் கூட்டிற்குத் திரும்பிச் சென்று நிரந்தரமாக அடங்கிவிட்டது. அந்தக் கடவுள் மகனின் திருவடிகளை நினைப்பதன் மூலம் நாமும் கடவுள் அன்பைப் பெறுவோமாக. ☆

---



ஸ்திரீபோகத்தின் இறுதியில் உண்டாகும் சுகானுபவத்தில் மனம் நிமிஷம் அசைவற்றிருப்பதனால் அந்தச் சுகம் நிமிஷகாலம் மட்டுமே ஏற்படுகிறது. ஆழ்ந்த உறக்கம் (சுஷுப்தி) எவ்வளவு காலம் தொடருகிறதோ அது வரையில் அந்தச் சுகம் ஸ்திரமாக இருக்கிறது. மோட்சத்தில் மனம் அழிந்துவிடுகிறபடி யால் அப்போது சுகம் (காலவரையறையின்றி என்றென்றைக்குமாக.) ஸ்திரமாகி விடுகிறது. ஆகவே, 'சௌக்கியம், நிலைத்திருத்தல்' ஆகிய இரண்டும் சேர்ந்த தே நித்தியானந்தம் எனப்படும் பிரம்மானந்தம் ஆகும். மற்ற விஷயசுகம் யாவும் அந்த ஆனந்தத்தின் ஒரு சிறிய அம்சம் மட்டுமே ஆகும்.

—லகுசதச்லோகீ

பத்தினி, பக்தர், தத்துவஞானிகள் ஆகியோரை நடுங்கச் செய்தவர் ஒரு வருஷத்திற்குள் தங்கள் செல்வத்தோடு அழிவர்; இது சத்தியம்.



பத்தினி பக்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தம் கலங்கிடச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாய்ந்திடும்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே.

—திருமூலர்.



சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்கு
அபாய மொருநாளு மில்லை; உபாய மதுவே

—ஔவையார்

சுத்தனோ அசுத்தனோ, எவ்வித நிலையில் உள்ளவனோ ஒருவன் தாமரைக் கண்ணனை (விஷ்ணுவை) ஸ்மரித்தானே யானல் அவன் உடலிலும் உள்ளத்தி லும் சுத்தியுள்ளவனாக ஆகிறான்.

—ஒரு சமஸ்கிருத சுலோகம்

ஈசனடியார் இதயங் கலங்கிடத் தேசமும் நாடும்
சிறப்பும் அழிந்திடும்.

—திருமந்திரம்

# ஆன்மிக உரையாடல்

சுவாமி துரியானந்தர்

சுவாமி துரியானந்தர் தொடர்ந்து கூறினர் : கபீர் சொன்னர் : ''பிறர் உடைமைகளை ஓயாமல் கவருகிற ஒருவன் எத்தனை தானதர்மம் செய்தாலும், ஏதும் செய்ததாகாது. பிறரை அண்டியே வாழ்கிறவன் எவ்வளவு தீர்க்காயுள் பெற்றிருப்பினும் அவன் உயிரோடிருப்பவனே அல்ல. பிறரை அவதூறு சொல்பவன் எவ்வளவுதான் நாமஜபம் செய்தாலும் ஜபித்தவனுகமாட்டான்.''

பிறரிடமிருந்து திருடியதைக் கொண்டு ஒருவன் தானம் செய்தால் அது என்ன நலனைத் தரும்? பிறரின் தானசிந்தையைச் சார்ந்தே தீர்க்காயுளுடன் வாழ்வது சாவுக்குச் சமானம்தான். பரநிந்தைக்காரன் பகவந்நாமாவை ஜபிப்பது பயனற்றதே. அதனுல்தான் இயேசு, ''நீ தெய்வபீடத்துக்குக் காணிக்கை கொண்டுவரும்போது உன் சகோதர ஜீவன் ஒருவனுக்கு உன்னிடம் குறை இருப்பது நினைவு வருமானல், பீடத்துக்கு அப்பாலே உனது காணிக்கையை வைத்துவிட்டு, வெளிவழிச் சென்று முதலில் அந்தச் சக ஜீவனிடம் சமரசம் செய்துகொள்; பிறகு வந்து காணிக்கையை அர்ப்பணம் செய்'' என்ருர்.

*சீடர் :* இதெல்லாம் கேட்க மிகவும் அழகாக இருக்கிறது, மகராஜ். ஆனல் ஒருவன் உயிரையே கொடுத்தால்தான் இதை நடத்திக் காட்ட முடியும். தத்துவரீதியில் இதைப் புரிந்துகொள்வது சுலபம்; ஆனல் அனுஷ்டித்துக் காட்டுவது மகா கடினம்.

**சுவாமி துரியானந்தர் :**

ஆயின் புத்திபூர்வமாக மட்டுமே புரிந்துகொள்வதுங்கூடப் பயனற்றதல்ல. இந்த (பாரத) தேசத்தில்தான் இது (புரிந்துகொள்வது) சாத்தியம். பிரமத்தைச் சாட்சாத்கரித்த அநேக ஜீவர்கள் இங்கேதான் பிறந்தார்கள். அதனுல் அவர்களது அனுபவங்களின் சக்திக் கவர்ச்சி இந்நாட்டின் உட்குருத்திலேயே புகுந்துவிட்டது. அதனுல்தான் இந்த உண்மைகளை ஆடவரும் பெண்டிரும், கிழவரும் குமரரும், அனைவரும் எளிதில் புரிந்துகொள்ள முடிகிறது.

ஏ: இறைவனின் சகுணம், நிர்க்குணம் ஆகிய இரண்டு தன்மைகளையும் ஒரே சமயத்தில் அனுபவ பூர்வமாக உணருவதும், ஒருவேளை, வேறு எந்தத் தேசத்தாலும் முடியாத விஷயம்தானே?

**சுவாமி துரியானந்தர்:**

இந்நாட்டு ரிஷிகள் மட்டுமே நிர்க்குணப் பிரம்மத்தைச் சாட்சாத்கரித்தார்கள். 'நானே பிரம்மம், நான் அவனே' என்னும் அனுபவஞானம் ஒரு முஸ்லிமுக்கு வந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆனல் அவர் இப்படி வெளியிட்டுக் கூறியவுடன் முல்லாக்களுக்கு அவரிடம் மிகவும் சினம் மூண்டது. அலியின் பரம்பரையில் வந்த இந்த முல்லாக்களே முஸ்லிம்களுக்குப் புரோகிதர்களாக இருந்தார்கள். அவர்கள் துவைதிகள். ஒரு சமயம் சக்கரவர்த்தியின் மகளுக்கு உயிராபத்தான காய்ச்சல் கண்டது. எந்த மருத்துவராலும் அவளைக் குணப்படுத்த முடியவில்லை. (மேற்சொன்ன) சாதுவை அழைத்துக் காட்டலாம் என்று யாரோ யோசனை கூறினர். ''அவருக்கு அற்புதச் சக்திகள் உள்ளன. நிச்சயம் அவர் இவளைக் குணப்படுத்த முடியும்'' என்று அவர் கூறினர்.

அதன்படி சாது வரவழைக்கப்பட்டார். அவர் ராஜகுமாரியைப் பார்த்து, ''ஆண்டவனின் பெயரில் ஆணையாக நீ குணமடைந்துவிட்டதாகப் பிரகடனம்

செய்கிறேன்; ஆகவே எழுந்திரு'' என்றார். ஆனால் இந்த வார்த்தைகளுக்கு ஒரு பலனும் இருக்கவில்லை. உடனே அவர், ''நீ குணமாகி விட்டாய் என்று நான் சொல்கிறேன். எனவே எழுந்திரு'' என்று கோஷித்தார். அக்கணமே அவனும் சொஸ்தமாகி எழுந்திருந்தாள். சக்கர வர்த்தி மகிழ்ந்தார். ஆனால் முல்லாக்களோ, ''அவர் தாம் அல்லாவைவிடச் சக்தி வாய்ந்தவர் என்று எப்படிச் சொல்லிக்கொண்டார், பார்த்தீர் களா?'' என்று கூப்பாடு போட்டனர். அதனால் அவர் குற்ற விசாரணைக்கு ஆளாக்கப்பட்டார். உயிரோடே யே தோலுரிக்கப்பட்டார். இந்தப் பயங்கர நிலையிலே யே அவர் விடுவிடாகச் சென்று ஆகாரத்துக்காகப் பிச்சையெடுத்தார். ஆனால் எல்லாக் கதவுகளும் அவர் முகத்தில் சாத்தப்பட்டன. ஒரு கசாப்புக் கடைக்காரன்தான் ஒரு மாமிசத் துண்டை அவரிடம் விட்டெறிந்துவிட்டுக் கதவை மூடினான். பிறகு அவர் மாமிசத்தை வாட்டுவதற்காக நெருப்புக்குப் பிச்சை கேட்டார். அனைவரும் மறுத்துவிட்டனர். அப்புறம் அவர் அந்த மாமிசத்தைச் சூரியனுக்கு எதிரே பிடித்தார். (வாட்டும் அளவுக்கு) அதிக வெப்பம் தருவதற்காகச் சூரியனே அப்போது கீழ் மட்டத்துக்கு வந்தது. இதனால்தான், மூல்தானில் சூரியன் மிகவும் கிட்டத்தில் இருக்கிறது என்று (பொதுமக்கள் நம்பிக்கையில்) சொல்லப்படுகிறது.

ஒரு பிரம்மசாரி; இது எப்போது நடந்தது?

சுவாமி துரியானந்தர்: பதினைந்தாம் நூற்றுண்டை யொட்டி. ★

# ஆதிசங்கரர் அருளிய சிவ பஞ்சாக்ஷர ஸ்தோத்திரம்

நாகங்களின் தலைவனுகிய நாகேந்திரனைக் கழுத்தில் அணியும் மாலையாகக் கொண்டவனே! முக்கண்களை உடையவனே! திசைகளைக் கலையும் திருநீறு பூசிய நெற்றியை உடையவனே! எங்கும் நீக்கமற நிறைந்த பரம்பொருளே! கடவுளர்களில் தலைசிறந்தவனே! முழுமையானவனே! உறையிடத்தை ஆடையாகக் கொண்டவனே! தெய்விக மந்திர சக்தி வாய்ந்த முதல் எழுத்தாகிய 'ந' வுக்கு உடைய சிவபெருமானே! உனது பொன்னடிகளை என் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

தேவலோகத்தில் ஓடிய புனித கங்கையாகிய மந்தாகினி நதியைத் தலையில் கொண்டவனே! நறுமணம் தோய்ந்த சந்தனத்தை உடலிற் பூசியவனே! நந்தி தேவனின் தலைவனே! தலையாய கடவுளே! மந்தாரை முதலிய நறுமண மலர்களால் அலங்கரிக்கப்பெற்றவனே! தெய்விக மந்திரசக்தி வாய்ந்த! 'வுக்கு உடையவனே! நினது மலரடிகளை எனது சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

தெய்விக அன்னை கௌரியின் தாமரை முகத்தைப் பிரகாசிக்கச் செய்யும் உதய சூரியனே, தக்கனின் யாகத்தை அழிப்பவனே! திருநீலகண்டனே! எருதை வாகனமாகப் பெற்றவனே! மூன்றும் எழுத்தாகிய 'சி'க்கு உடையவனே! உன் திருவடிகளை என் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

வசிஷ்டர், அகஸ்தியர், கௌதமர் முதலிய மா முனிவர்களால் முழுமுதற் கடவுளாகப் போற்றி வணங்கப்பெற்றவனே! குளிர்நிறை முழுமதியையும், கதிர்நிறை ஆதவனையும், ஒளிநிறை அக்கினியை யும் முக்கண்களாகப் பெற்றவனே! தெய்விக மந்திரசக்தி வாய்ந்த நான்காம் எழுத்தாகிய 'வா'வுக்கு உடையவனே! நினது கமல மலர்ப்பாதங்களைச் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

தியாகத்தின் சின்னமே! சடைமுடியுடையவனே! பிநாகம் என்ற வில்லைக் கையிற் கொண்டவனே! ஒளிமயமாக எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் பரம் பொருளே! உறையிடத்தை ஆடையாகக் கொண்ட வனே! தெய்விக மந்திரசக்தி வாய்ந்த ஐந்தாம் எழுத்தாகிய 'ய'வுக்கு உடையவனே! நினது திருத்தாள் களை என் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

இந்தப் புனிதமான ஐந்து ஒழுத்தையும் சிவபிரானின் அருகில் இருந்து எவர் ஓதினலும் சிவபேறு பெற்று நீங்காப் பேரின்பம் பெறுவர்.

தமிழாக்கம்: எஸ். திலகவதி

# சிவராத்திரி

பிரம்மசாரி முத்துக்குமார்

ஒருவனது ஆன்மிக முன்னேற்றத்திற்கு மிகப் பெரும் தடையாக இருப்பது அகங்காரமே ஆகும். 'நான்' என்பது அழிந்து 'எல்லாமே அவன்' என்னும் மெய்யுணர்வு உண்டாகும்போதுதான் ஆத்மஞானம் பரிபூர்ணமாக மலர்கிறது. அகங்காரம் உள்ள இடத்தில் ஆண்டவனின் சாந்நித்தியம் விளங்குவதில்லை.

இந்துமத புராணங்கள் பலவும் ஆணவத்தின் உருவமாகிய அசுரர்களை இறைவன் அழித்து மெய்ஞ் ஞானம் புகட்டினுர் என்னும் கருத்தை மையமாகக் கொண்டுள்ளன. இந்துமத விழாக்களும் புனித நாட்களும் புராணங்களுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டவையாகும்.

இந்துக்களுக்கு, குறிப்பாகச் சைவர்களுக்கு, மாசி மாதத்தில் வரும் மகா சிவராத்திரி மிகவும் முக்கியத் துவம் வாய்ந்த நன்னுளாகத் திகழ்கிறது. ஆணவம் அழிந்து மெய்ஞ்ஞானம் பெறுவதை இந்த நன்னுள் உணர்த்துகிறது.

ஏனைய இந்துமத விழாக்களைப் போலவே சிவ ராத்திரியும் ஒரு புராணக் கதையை மையமாகக் கொண்டுள்ளது.

சிவபெருமானின் அறுபத்துநான்கு திருமூர்த்தங் களுள் லிங்கோத்பவமூர்த்தி என்பதும் ஒன்ருகும். சிவாலயங்களிலுள்ள சிவலிங்கத்துக்குப் பின்புறம் வேருெரு திருவுருவம் காணப்படும். இது லிங்கோத் பவமூர்த்தியின் திருவுருவமாகும். இதில் ஜடாமகுடம் லிங்கவட்டத்துக்குள் முடியாமலேயே காணப்படும். அதன் பாதத்தையும் லிங்கத்தின் அடியில் முடியும் வரையிலும் காண முடியாது. இந்த மூர்த்திக்குக் கீழே ஒரு வராகமூர்த்தி அமைந்திருக்கும். மேலே அன்னப்பறவையின் உருவத்தில் இன்னெரு மூர்த்தி யும் காணப்படும்.

உருவம் இல்லாத பரம்பொருள் அருவுருவான லிங்கமாக இருக்கிருர். அதோடு அந்த லிங்கத்துக் குள்ளேயே லிங்கோத்பவமூர்த்தியாகவும் தம்மை அவர் வெளிப்படுத்திக்கொள்கிருர். இறைவனுக்கு ஆரம்பமும் முடிவும் இல்லை. இந்த உண்மையை மேலே லிங்கவட்டத்திற்குள் உள்ள ஜடாமுடி முடி யாமலும், கீழே அதுபோலவே திருப்பாதம் லிங்கத் திற்குள் அடங்காமலும் இருப்பது உணர்த்துகிறது.

அருவுருவமாகவும், அடி முடி என்னும் எல்லை களுக்கு உட்படாமலும் இறைவன் சோதிப்பிழம்பாக நின்ருர். பரந்து வியாபித்த நிலையில் சோதிர்மய லிங்கமாக ஆகாயத்துக்கும் பூமிக்குமாகச் சிவ பெருமான் காட்சி கொடுத்து அருள் செய்த இரவுதான் புனிதச் சிவராத்திரியாகக் கொண்டாடப் பெறுகிறது.

### சிவராத்திரி விரதம் அனுஷ்டிக்கும் முறை

சிவராத்திரியன்று உணவு உட்கொள்ளாமல் உப வாசம் இருக்க வேண்டும் என்று ஆகமம் விதித்திருக் கிறது. அலைபாயும் மனம் அடங்கிக் கடவுள் சிந்தனை யில் நிலைத்திருக்கும் வகையில் புனித நூல்களைப் படிப்பது, படிக்கக் கேட்பது, பஞ்சாட்சர நாமத்தை ஜபிப்பது, சிவதொண்டில் ஈடுபடுவது ஆகிய வழி முறைகளை மேற்கொள்ள வேண்டும்.



இரவு நான்கு சாமங்களிலும் கண்விழித்திருந்து சிவபூஜை செய்ய வேண்டும். பூஜைசெய்ய இயலா தவர்கள் அருகிலுள்ள சிவன் கோயிலுக்குச் சென்று அங்கு நடைபெறும் பூஜைகளில் கலந்துகொள்ள லாம். பொழுது விடிந்ததும் அதிகாலையில் நீராடிக் காலைக்கடன்களை முடித்து, மேலே கூறியபடி அன்றையதினமும் பகல்வேளையில் சிவபூஜை செய்து திட்சாகுருவை வணங்க வேண்டும்; சிவனடி யார்களுக்கு அன்னதானம் செய்ய வேண்டும்; பிறகு பாரணம் செய்ய வேண்டும் என்று ஆகம விதி கூறுகிறது.

### பூஜைமுறை

சிவராத்திரி பூஜையின்போது சிவலிங்க அபிஷேகம் முக்கிய இடத்தைப் பெறுகிறது. பிரபஞ்சவடிவமான ஜோதிர்லிங்கம் குளிர்ந்தால் உலகமெல்லாம் குளிரும். இந்த உண்மை அடிப்படையில்தான் நான்கு சாமங்களிலும் சிவராத்திரியின்போது சிவலிங்கத்துக்கு அபிஷேகம் நடத்தப்படுகிறது.

முதல் சாமத்தில் பஞ்ச கவ்யத்தினுலும் (கோசலம் கோமலம் தயிர் பால் நெய் ஆகிய ஐந்தும் சேர்ந்து பஞ்சகவ்யம் எனப்படும்), இரண்டாம் சாமத்தில் பஞ்சாமிர்தத்தினுலும் (தேன் தயிர் பால் நெய் சர்க்கரை), மூன்ரும் சாமத்தில் தேனினுலும், நான்காம் சாமத்தில் கருப்பஞ்சாற்றினுலும் சிவலிங்கமூர்த்திக்கு அபிஷேகம் செய்ய வேண்டும் என்று காரணைகமம் குறிப்பிடுகிறது.



சந்தனம் முதல் சாமத்திலும், அகிலாஞ்சனம் இரண்டாம் சாமத்திலும், பச்சைக்கர்ப்பூரம் மூன்ரும் சாமத்திலும், குங்குமம் நான்காம் சாமத்திலும் சிவலிங்க வடிவில் எழுந்தருளியுள்ள பெருமானுக்குச் சாத்துதல் வேண்டும். வில்வ இலை, தாமரைமலர், சண்பகப்பூ, நந்தியாவர்த்தப்பூ ஆகியவற்றினுல் முறையே நான்கு சாமங்களிலும் சிவபெருமானுக்குச் சாத்தி அர்ச்சனை செய்ய வேண்டும் என்று சித்த தந்திரம் கூறுகிறது.

முதல் சாமத்தில் பயற்றம்பருப்புச் சோறு, இரண்டாம் சாமத்தில் பாயசம், மூன்ரும் சாமத்தில் எள் கலந்த சோறு, நான்காம் சாமத்தில் தூய தனிச் சோறு என்பவற்றை இறைவனுக்கு நிவேதனம் செய்யவேண்டும். அவ்விதம் செய்ய இயலாவிட்டால் நான்கு சாமங்களிலும் சுத்தான்னம் மட்டுமே நிவேதனம் செய்யலாம்.

நிவேதனம் செய்யும்போது சர்வன், உக்கிரன், சங்கரன், சிவன், சாம்பவன், ஈசானன், மகாஉக்கிரன், பூதாதிபதி என்னும் எட்டுச் சிவமூர்த்தங்களுக்குரிய மந்திரத்தை உச்சரித்துத் தூப தீபம் முதலிய உபசாரங்களுடன் ஆராதிக்க வேண்டும் என்று சிவபூஜைமுறை கூறுகிறது. ஒன்றுமே செய்ய இயலாதவர்கள் சிவநாமத்தை ஜபித்துக்கொண்டிருந்தாலே போதும்.

### சிவராத்திரி வரலாறு

விஷ்ணுவும் பிரம்மாவும் தம் தம் பதவிகளை முன்விட்டு, 'நாம் பெரியவர்; நாம் பெரியவர்' என்ற அகங்காரம் கொண்டிருந்தனர். அவர்களின் அகந்தையை அழித்து உண்மையை உணர்த்தச் சிவபெருமான் திருவுள்ளம் கொண்டார். ஆகவே அவர் அகங்காரமே உருவாகி நின்ற விஷ்ணுவுக்கும் பிரம்மாவுக்கும் மத்தியில் ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெருஞ்சோதியாக நின்ருர்.

அப்போது, 'யார் இந்தச் சோதிப்பிழம்பின் அடியையோ முடியையோ கண்டுபிடிக்கிருரோ அவரே பெரியவர்' என்று அசரீரி ஒலித்தது. உடனே விஷ்ணு வராக வடிவம் எடுத்துக்கொண்டார்; சோதிப்பிழம்பின் அடியைக் கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் பூமியைத் துளைத்துக்கொண்டே பாதாளம் சென்ருர். பிரம்மா அன்னப்பறவையின் உருவத்தில் சோதிப்பிழம்பின் முடியைத் தேடிப் போனுர்.

அடியைத் தேடிப் போன வராகத்தினுல் அடியையோ, முடியைத் தேடி மேலே பறந்து போன அன்னப்பறவையினுல் முடியையோ காண முடியவில்லை. அன்னப்பறவையின் வடிவில் சென்ற பிரம்மா திரும்பி வந்து, "நான் முடியைக் கண்டுவிட்டேன்" என்று பொய் கூறினுர். அது காரணமாகவே பிரம்மாவுக்குப் பிரத்தியேகமான பூஜை இல்லாமற் போய்விட்டது. வராக வடிவில் சென்ற விஷ்ணு பூமிக்குமேலே வந்து தம் இயலாமையை ஒப்புக்கொண்டார்.

அன்னத்தின் வடிவில் சென்ற பிரம்மாவுக்குப் பெருமானின் சிரசும், வராக வடிவில் சென்ற விஷ்ணுவுக்குத் திருவடிகளும் அகப்படவில்லை. இதன் உட்பொருள்-பரமாத்மா ஆரம்பமும் முடிவும் இல்லாத தனிப்பெரும் பரம்பொருளாக விளங்குகிறார் என்பது தான். படைப்பு, பரிபாலனம் ஆகியவற்றை எல்லாம் கடந்த பொருள் அது. பட்டம் பதவிகளாலோ பெரும் திறமைகளாலோ பரம்பொருளை அடையவே முடியாது. பெரிய பதவிகளில் உள்ளவர்கள், ‘எல்லாமே நாம்தான்’ என்ற அகங்காரம் கொண்டு விடக்கூடாது. இந்த அகங்காரம் அவர்களுக்கு மட்டுமின்றிப் பிறருக்கும் பெரும் துன்பத்தைத் தந்துவிடும். எனவேதான், உலகிலேயே மிகவும் பெரிய பதவி வகிக்கும் படைப்புக் கடவுளும் காத்தல் கடவுளும் இங்கு அகங்காரத்தின் உருவமாக உருவகப்படுத்தப்பட்டுள்ளார்கள். அகங்காரம் இல்லாத உண்மையான அன்புக்குத்தான் இறைவன் வசப்படுவான். ‘அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே’ என்றும், ‘இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே!’ என்றும், இறைவனை அன்பால் அடிமையாக்கிய அடியவர்கள் அமுதினும் இனிய சொற்களால் பாடியிருக்கிறார்கள். தூய அன்பினாலே மிக மிக விரைவில் திருப்தியுற்று அனுக்கிரகிப்பவர் சிவபெருமான் என்பதனாலேயே அவருக்கு ஆசுதோஷன் என்ற பெயர் அமைந்துள்ளது.

அண்டகோடிகள் அனைத்துமே அடங்கியிருக்கும் சோதி வடிவில் இறைவன் காட்சி தந்த நாள் சிவராத்திரி. அந்த மகாசதுர்த்தசி இரவில் சிவசிந்தனையிலும் சிவகைங்கரியத்திலுமே ஈடுபட்டு அந்தப் பெருமானுள் அடங்கியிருப்போமாக. ★



நாம் இழைக்கும் இன்னல்களையும், நாம் அனுபவிக்கும் இன்னல்களையும் ஒரே தாரசினால் நாம் நிறுப்பதில்லை.

—ஈசாப்

ஒரு காரியத்தைத் தெரியாமல் செய்பவன் குழந்தை; புரியாமல் செய்பவன் மனிதன்; அதே காரியத்தைத் தெரிந்துகொண்டும் :புரிந்துகொண்டும் நேர்மாறாகச் செய்பவன் மிருகம்.

—புதுமைப்பித்தன்



மனம், வனம் இரண்டும் இருண்டவை; வனம் இல்லையேல் இராமாயண பாரத சரித்திரங்கள் கிடைத்திருக்கமாட்டா. பதினான்கு வருடம் வனவாசம் முடிந்தது; ராமர் ஊர் திரும்பும்போது வனத்தை விட்டுப் போகிறோமே என்று மனக் கஷ்டப்பட்டார். அதனால்தான் அடுத்த அவதாரத்தில் எடுத்த எடுப்பிலேயே பிருந்தா வனத்தில் இருக்க முடிவு செய்தார்.

—எம்பார் ஸ்ரீ விஜயராகவாச்சாரியார்

பிறவி எடுத்ததுமே சாவுக்குச் சீட்டு வாங்கிவிட்டோம். இப்போது நீங்கள் உட்கார்ந்துகொண்டிருங்கள், அல்லது பேசிக்கொண்டிருங்கள், அல்லது ஓடிக்கொண்டிருங்கள்; உட்கார்ந்துகொண்டே இருந்தாலும் மரணம் வரும், ஓடிக்கொண்டே இருந்தாலும் மரணம் வரும். நீங்கள் மரணத்தைப்பற்றி நினைத்தாலும் சரி, நினைக்காவிட்டாலும் சரி, அது வராமல் போகாது. மற்ற விஷயங்கள் உறுதியில்லாமல் போனாலும் மரணம் மட்டும் உறுதி.

விநோபா பவே

நல்லோர் மனதை நடுங்கச் செய்வது பாவம்; வலிய வழக்கிட்டு, மானம் கெடுப்பது பாவம்; தானம் கொடுப்போரைத் தடுப்பது பாவம்; மனமொத்த நட்புக்கு வஞ்சகம் இழைப்பது பாவம்; ஏழைகள் வயிறு எரியச் செய்வது பாவம்; பசித்தோர் முகத்தைப் பாராதிருப்பது பாவம்; கோள் சொல்லிக் குடும்பம் குலைப்பது பாவம்; குருவை வணங்கக் கூசி நிற்பது பாவம்; ஊன்சுவை உண்டு உடலை வளர்ப்பது பாவம்; கல்லும் நெல்லும் கலந்து விற்பது பாவம்; தவம் செய்வோரைத் தாழ்த்திப் பேசுவது பாவம்; தந்தை தாய் மொழியைத் தட்டி நடப்பது பாவம்.



—வடலூர் வள்ளலார்

# யார் அழுதது? யாருக்காக?



சுவாமி கருணானந்தர்

"இதோ பொழுது மறைகிறதே! இந்த ஒரு நாளும் வீணாகிவிட்டது. நான் இன்னும் உன் தரிசனத்தைக் காணவில்லையே! அம்மா பவதாரிணி, என் தாயே! உன்னை நான் எப்போது காண்பேன்? என் கதறல் உன்னை எட்டவில்லையா? அருள் செய்ய மாட்டாயா? உன்னைப் பார்க்காமல் என்னால் வாழ முடியாது, தாயே! என்னை இப்படியே ஏமாற்றி விடப் பார்க்கிறாயா? ராமபிரசாத் போன்ற பக்தர்கள் உன் தரிசனத்தைக் கண்டார்களே! என்னிடத்தில் மட்டும் ஏன் இப்படிக் கல்நெஞ்சுக்காரியாக இருக்கிறாய்? உனக்காக இரவும் பகலும் நான் ஏங்குவதை நீ அறியமாட்டாயா? மா! மா! காளீ"— இப்படி ஓர் அழுகுரல் நாள்தோறும் அதோ அந்தப் பஞ்சவடியிலிருந்து, நந்தவனத்தின் மூலையிலிருந்து அதோ அந்தக் கட்டிடத்தின் உச்சியிலிருந்து கேட்கிறது. நாள் முழுவதும் ஏங்கித் தவிக்கிறார். இரவும் பகலும் பொருமுகிறார்; பிரார்த்திக்கிறார். அவ்வப்போது வாய்திறந்து கதறுகிறார். எப்போதும் அவர் உள்ளம் ஏங்கித் தவிக்கிறது, மறுகுகிறது.

யாருக்காக ஏங்குகிறார்? யாரை நினைத்து அவர் உள்ளம் கதறுகிறது? அன்னை பராசக்திக்காக; அவளது தரிசனத்திற்காக. உணவை நினைக்கவில்லை; உடையை நினைக்கவில்லை. உலகத்தின் இன்ப துன்பங்களை எண்ணவில்லை. அவரது ஒரே சிந்தனை—உலகத்திற்கு ஆதாரமாக இருக்கிற மகமாயி. ஆயிரம் ஆயிரம் எண்ணங்கள் அனைத்தும் காளிமாதாவின் வடிவத்தையே நோக்கி ஓடின. சந்தையில் அன்னையை இழந்து தவிக்கிற குழந்தை, சந்தையின் விளையாட்டுப் பொருள்களிடத்து, உணவுப் பண்டங்களிடத்து, அங்கே சூழ்கிற நூற்றுக் கணக்கானவர்களிடத்து மனத்தைக் கொடுப்பதில்லை. அதன் ஒரே நோக்கம்: அம்மா, அம்மா, அம்மா! என் அம்மா எங்கே? ஒரே அழுகை. அவர் அப்படித்தான் தவித்துக்கொண்டிருந்தார். அப்படி ஓர் உருக்கம்.

கங்கைநதி அந்தப் புலம்பலைக் கேட்டுக் கொண்டே இருந்தது. நந்தவனத்து மலர்கள் இந்த ஏக்கக் குரலைக் கேட்டன. அவை அந்தப் பக்தனுக்காகப் பிரார்த்தித்தன. கங்கையின் துளி ஒவ்வொன்றிலும் அந்தக் குரலின் உருக்கம் மிதந்துகொண்டிருந்தது. கங்கை அந்தப் பக்தனுக்காகப் பிரார்த்தித்தது. ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஆயிரம் ஆயிரம் சாதகர்களைக் கண்டு வருகிற கங்கைக்கே வியப்பு. இப்படி ஓர் ஏக்கமா?

நடு இரவில் மனிதன் ஒருவன் தெய்வத்திற்காகக் குலுங்கிக் குலுங்கி அழுவதைக் கேட்டு விழித்தெழுந்த பறவைகள் பகல் முழுவதும் அவனைப் பற்றியே பேசின. தெய்விக எண்ணத்தைத் தவிர வேறோர் எண்ணம் புகாத அந்தப் பரிசுத்த இதயத்தைக் கண்டு, பரிசுத்த மலர்கள் யாவும் அதிசயித்தன. எவ்வளவு நாட்களுக்குத்தான் இப்படி ஓர் இதயத்தைக் கருணாமயி காளி ஏங்கவைக்க முடியும்?

போதும் இந்தத் தவம் என்று ஓடி வந்து ஒளிமயமாக நின்றாள் அவன்முன். ஒளியாகப் பரவி, ஒளியலைகளாக அவனை மூழ்க வைத்து ஆனந்தத் தாலாட்டுப் பாடினாள். அனைத்துத் திருவிளையாடல்களையும் ஆடிக் காட்டினாள்.

ஓ ராமகிருஷ்ணரே! தெய்வத்தை உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்திவிட்டீர்களே! நீங்கள் ஒருவர்தாம் பாக்கியசாலி. உங்களுடைய வாழ்க்கையைப் பார்த்து எங்களுக்கெல்லாம் புதிய நம்பிக்கை பிறக்கிறது. உலகத்தின் அன்னையைக் காண முடியும்; அவளோடு பேச முடியும் நேருக்கு நேராக; இதைத் தாங்கள் நிரூபித்துக் காட்டி எங்கள் அனைவருக்கும் நம்பிக்கையைத் தந்து விட்டீர்கள். உங்கள் வாழ்க்கை முழுமை பெற்று விட்டது. இனி நீங்கள் அழமாட்டீர்கள். பகலும் இரவும் ஒரே மகிழ்ச்சி வெள்ளம்தான். வற்றாத கங்கை போலத் தங்களது உள்ளம் மகிழ்ச்சி

வெள்ளமாகப் பொங்கித் ததும்பிக் குதிக்கும். மனிதனாக நின்று அழுதீர்கள். ''அம்மா, காளீ, மாயீ'' என்று கதறிக் கதறி, அவளுக்காக ஏங்கி ஏங்கி—ஓ! அவள் ஓடிவந்து உங்கள்முன் நின்று பேசிச் சிரித்தாள். நீங்கள் அவளது செல்வக் குழந்தையாகிவிட்டீர்கள்.

ஆனால் நாங்களோ அநாதைக் குழந்தைகள். எங்களுக்கும் அவள்தான் தாய். எங்களைப் பெற்றவளும் அவள்தான். ஆனால் அது கதை; கேட்ட செய்தி. நாங்கள் அவளைப் பார்க்கவில்லை. பார்க்கப் போகிறோமா? ராமகிருஷ்ணரே! உங்கள் அழுகை முடிந்துவிட்டது. உங்கள் ஏக்கம் ஓய்ந்துவிட்டது. நீங்கள் தெய்வமாகிவிட்டீர்கள். உங்கள் மனித வரலாறு முடிந்துவிட்டது.

அது என்ன அழுகுரல்? நடு இரவில் அதோ அந்த நந்தவனத்தில் அந்த அழுகுரல் கேட்கிறது! கங்கையின் அமைதியான நீர்ப்பரப்பில் அந்த அழுகைக் குரல் பதிந்து பதிந்து பரவுகிறது. பறவைகளின் உறக்கம், மீண்டும் கலைகிறது. நந்தவனத்துப் பூஞ்செடிகள் தங்கள் குழந்தை மலர்களிடத்து வியப்போடு பேசின. 'இவர் ஏன் மறுபடியும் அழுகிறார்?' கங்கை இந்தக் கேள்வியைத் திருப்பித் திருப்பிக் கேட்டது, தனக்குத் தானே; 'நான் ஓடிக்கொண்டே இருக்கிறேன். கடலோடு கலந்தபின் ஓட முடியுமா? ஓட்டம் முடிந்துவிடுகிறதே! இவர்தாம் ஆனந்தத்தைத் தொட்டுவிட்டாரே! அருள்ஜோதியில் திளைப்பவர் ஏன் அழுகிறார்? இன்பப் பெருக்கில், இறைமையின் மடியில் தவழ்கிற இவர் ஏன் அழுகிறார்? எதற்காக? யாருக்காக? என் அருகில் இமயம் முதல் கங்கா சாகரம் வரை எத்தனையோ முனிவர்களை, ஆன்மிகச் செல்வர்களை நான் கண்டு வருகிறேன். தங்கள் இதயத்தில் தெய்வத்தை மலரச் செய்தவர்கள், அந்த மலர்ச்சிக்குப் பின் அழுது நான் கண்டதில்லையே! இவர் ஏன் அழுகிறார்?'

''பரிசுத்த மனம் படைத்த இளைஞர்களே!'' அதோ, அந்த உயர்ந்த கட்டிடத்திலிருந்து அவர் கூவுகிறார்:—''புத்தம்புதிய இதயம் படைத்த என் அருமைக் குழந்தைகளே!'' அவரேதாம் உருகி உருகி அழைக்கிறார். கேவிக் கேவி அழுதபடி புலம்புகிறார்: ''தெய்வத்தின் சந்நிதிக்கு ஏற்ற மங்கலச் செல்வங்களே! காமினி காஞ்சன ஆசை பற்றாத, தூய எண்ணம் கொண்ட என் பிள்ளைகளே! நீங்கள் எப்போது வருவீர்கள்? என் அம்மா பவதாரிணி சொன்னாள், நீங்கள் என்னைப் பார்க்க வருவீர்கள் என்று. விரைந்து வாருங்கள். உங்களைப் பார்க்காமல் என்னால் உயிர் வாழ முடியாது. தெய்வத்திற்காக ஏங்குகிற உங்களைப் போன்றவர்களைக் காணாமல் நான் எப்படி வாழ்வேன்?

''புதிய அரும்புகளே! மாசுமறுவற்ற என் குழந்தைகளே! தெய்வத்தின் சந்நிதிக்கு என் தாய் காளியின் திருமுன் உங்களை அழைத்துச் செல்வேன். விரைந்து வாருங்கள்.''

ஆம், பரமஹம்ச ராமகிருஷ்ணர் கூவிக் கூவி அழைக்கிறார்; அயராமல் கூவிக் கூவி அழைக்கிறார்.

மனிதன் ராமகிருஷ்ணன் அழுதான், தெய்வத்திற்காக. வெளிப்பட்டது தெய்விகம்.

மனிதன் பரமஹம்சமாகிவிட்டான். இப்போது பரமஹம்சர் ஏன் அழுகிறார்? பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் ஏன் அழுகிறார்?

மனிதர்களைத் தெய்வமாக ஆக்குவதற்காகத் தான்.

மனிதன் அழுதான்; தெய்வம் விளைந்தது.

தெய்வம் அழுகிறது; மனிதனைத் தெய்வமாக்க.

---

ஹே தேவியே! எறும்புப் பொந்தில் குழந்தையைப் போட்டுவிட்டு அது துடிக்கும்போது தாயார் பார்த்துச் சிரித்துக்கொண்டிருப்பாளா? என்னை இந்தச் சம்சாரத்தின் மத்தியில் போட்டுப் பார்ப்பதனால் என்ன பயன்? என்னை எப்போது எடுத்துக் கொஞ்சுவீர்களோ?

—ஸ்ரீகிருஷ்ணப் பிரேமி

ஏகமாயும் அகண்டமாயும் பரிசுத்தமாயும் இருக்கப்பட்ட பிரம்மத்தில், மனம் உதித்தவுடன், பிரபஞ்சம் முதல் சகலமும் இருப்பதாகத் தோற்றுவிக்கும் சக்தி மனதுக்கு உண்டு.

— விசாரசாகரம்






# உதவாத குதிரை

திருப்பூர் சு. கிருஷ்ணன்

ஒரு பெரிய வியாபாரி தன் வாணிபத்திற்கு உதவுவதற்காக ஒரு குதிரையையும் ஒரு கழுதையையும் வளர்த்து வந்தான். பிறவியிலேயே கழுதை கொஞ்சம் நோஞ்சானாகவும் பலமில்லாததாகவும் இருந்தது. குதிரையோ பளபளப்பாகவும் புஷ்டியாகவும் விளங்கியது.

வியாபாரி பலவேறு தூரப் பிரதேசங்களுக்குச் சென்று வாணிபம் செய்வதுண்டு. அப்படிப் போகும்போது குதிரையையும் கழுதையையும் உடன் அழைத்துப் போவான். வியாபாரப் பொருள்களைப் பொதிகளாக அவன் கட்டி வைத்திருந்தான். சம அளவு பொதிகளைக் குதிரை முதுகிலும் கழுதை முதுகிலும் ஏற்றி, அவற்றை அவன் விரட்டிச் செல்வான்.

இந்த முறை குதிரையின் முதுகிலும் கழுதை முதுகிலும் ஐந்தைந்து பொதிகளைச் சுமத்தினன் வியாபாரி. இரண்டையும் தான் போகவேண்டிய பிரதேசத்திற்கு நடத்திச் சென்ருன்.

குதிரை அநாயாசமாக ஐந்து பொதிகளையும் சுமந்து சென்றது. அதன் மேல் இன்னும் இரண்டு மூன்று பொதிகளை வைத்தால்கூடத் தாங்கும் போலிருந்தது. கழுதையோ தள்ளாடியது. சுமைகளின் பலம் தாங்கமாட்டாமல் அது விழுந்துவிடும் போல் தோன்றியது. அன்றைக்கு அதற்குத் தாங்க முடியாத காய்ச்சல் வேறு. கழுதை மிகவும் சிரமப்பட்டது. கடைசியில், வேறு வழியில்லாமல், அது மெல்லக் குதிரையிடம் உதவி கேட்டது.

“அன்புள்ள குதிரையே ! ஏனே என் கால்கள் தள்ளாடுகின்றன. காய்ச்சலினல் முதுகெல்லாம் ஒரே வலியாக இருக்கிறது. தயவுசெய்து இன்றைக்கு மட்டும் நீ என் முதுகிலுள்ள இரண்டு பொதிகளையாவது ஏற்றுக்கொண்டாயானல் பேருதவியாக இருக்கும்” என்றது கழுதை.

குதிரை மிகவும் மிதப்பாக ஒரு கனைப்புக் கனைத்துவிட்டுச் சொல்லிற்று—“அது எப்படி? சமப் பங்கு என்ருல் சமப் பங்குதான். உனக்கு ஒரு நீதி, எனக்கு ஒரு நீதியா? உனக்குக் காய்ச்சல் வந்தால் அதற்கு யார் என்ன செய்ய முடியும்? நான் ஐந்து பொதிகளைத்தான் சுமப்பேன்.”

இதைக் கேட்டதும் கழுதைக்கு மிகவும் வருத்தமாகப் போய்விட்டது. ஆனல் முதுகில் வைத்திருந்த பொதிகளோ அதனல் சுமக்க முடியாத அளவுக்குக் கனமாகவே இருந்தன. ஆகையால், வேறு வழியில்லாமல், கொஞ்ச நேரம் போனதும், மீண்டும் குதிரையிடம் உதவி கேட்டுப் பார்த்தது கழுதை.

“நண்பனே ! என் அன்புள்ள குதிரையே ! நீ மிகவும் பலசாலியாக இருக்கிருய். என்னுல் இத்தனை பொதிகளேச் சுமக்கவே முடியவில்லே, அப்பா ! காய்ச்சல் வந்திருப்பதால், உயிரே போய்விடும்போல் வேதனேயாக இருக்கிறது. இந்த முறை மட்டும் ஓர் உதவி செய். ஒரே ஒரு மூட்டையையாவது நீ வாங்கிச் சுமந்து வா. அடுத்த முறை, எனக்குக் காய்ச்சல் நீங்கிய பிறகு, நீ உதவி செய்ததற்குப் பதிலாக எவ்வளவு மூட்டையைச் சுமக்கச் சொல்கிருயோ அவ்வளவு மூட்டையை நான் சுமக்கிறேன்” என்று மிகவும் பரிதாபமாய்க் கெஞ்சிக் கேட்டது கழுதை.

“நல்ல நியாயம் இது! உனக்கும் எனக்கும் சமமாகத்தானே முதுகில் சுமை வைத்திருக்கிருர் எசமான்? இதில் கேள்வி என்ன, பதில் என்ன? நான் உன் மூட்டையை வாங்கிச் சுமக்க வேண்டிய தேவை என்ன?” என்று கூறி, மீண்டு நிர்த்தாட்சிண்யமாக மறுத்துவிட்டது குதிரை.

கொஞ்ச தூரம் போவதற்குள் கழுதையின் கால்கள் ஒரேயடியாக நடுங்கத் தொடங்கின. வாயில் நுரை தள்ளிற்று. அதன் கண்கள் செருக ஆரம்பித்தன. அடுத்த கணம் அதன் உடல் கீழே சாய்ந்தது. தாங்க முடியாத சுமையைத் தாங்கி நடந்ததனுல், காய்ச்சலாய்க் கிடந்த கழுதை கீழே விழுந்து உண்மையிலேயே உயிரை விட்டுவிட்டது.

தூரத்தில் வந்துகொண்டிருந்த வியாபாரி, கழுதை கீழே விழுந்ததைப் பார்த்ததும் விரைந்து வந்தான். அது இறந்துவிட்டதை அறிந்துகொண்டான். ‘அதன் முதுகில் ஏற்றியிருந்த ஐந்து பொதிகளேயும் இனி எப்படிச் சுமந்து செல்வது? இந்தக் குதிரை மேல் வைத்துவிட வேண்டியதுதான். வேறு வழி?’ எல்லாவற்றையும் தூக்கிக் குதிரையின் முதுகில் வைத்தான். ‘செத்துப்போன இந்தக் கழுதையின் தோல் எதற்காவது பயன்படலாம். இந்தக் கழுதையின் உடலேயும் கொண்டுபோக வேண்டியது தான். சரி’ என்று நினைத்தபடி, கழுதையின் உடலேயும் அவன் அப்படியே தூக்கிக் குதிரையின் முதுகின் மேல் வைத்தான். குதிரையை விரட்டிவிட்டுத் தானும் தொடர்ந்தான்.

எந்தக் குதிரை கழுதையின் முதுகில் இருந்த பொதிகளில் ஒன்றைக்கூடச் சுமக்கமாட்டேன் என்று சொல்லிற்ருே, அதே குதிரை இப்போது கழுதையின் முதுகின் மேல் இருந்த ஐந்து பொதிகளே மட்டுமல்லாமல் கழுதையையுமே சேர்த்துச் சுமந்து கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடக்கலாயிற்று !

(டால்ஸ்டாய் எழுதிய இந்தக் கதை, பிறர் படும் துன்பத்தை துடைக்க முன் வாரதவர்கள் மேலும் மேலும் துன்பத்திற்கு ஆளாவார்கள் என்னும் உண்மையை மிக எளிய முறையில் விளக்கியுள்ளது.)

---

இந்தக் கர்மபூமியை அடைந்தும் ஒருவன், தன் துர்பாக்கியத்தால் நற்கருமங்களேச் செய்யாதிருப்பாஞகில் அவன், சந்தனக்கட்டையை எரித்து வைடூரியப் பானேயில் எள்ளுப்பதரைச் சமைப்பவஞகவும், எருக்கிலேப் பஞ்செடுப்பதற்காகப் பொற்கலப்பையின் கொழுக்களால் தரையை உழுகிறவஞகவும், கற்பூரச் செடியைப் பறித்துக் கொத்தவரைச் செடிகளேச் சுற்றி வேலி கட்டுகிறவஞகவும் ஆகிருன்.

—பர்த்ருஹரி



# வள்ளலார் நெறி



நா. மகாலிங்கம், பி. எஸ்ஸி., எப்.ஐ.இ.

சன்மார்க்க நெறிதான் வள்ளலார் நெறி. சத் என்பது உண்மை. மார்க்கம் என்பது நெறி. சன்மார்க்கம் என்பது உண்மை நெறி.

இந்த நெறி எல்லாருக்கும் பொதுவானது. இதற்குச் சாதி மத, சமய இன, நிறபேதங்கள் ஒன்றுமில்லை. எந்தச் சாதியினரும், எந்த மதத்தினரும், எந்த இனத்தினரும் சன்மார்க்க நெறியைக் கடைப்பிடிக்க முடியும். ஆனால் அதற்கு ஒரே ஒரு நிபந்தனைதான் உண்டு. அந்த நிபந்தனை என்ன?

யாராயிருந்தாலும் சரி, நெஞ்சிலே இரக்கம் நிரம்பியவராய் இருக்க வேண்டும். உள்ளம் கனிவு உடையவராய் இருக்க வேண்டும். மற்ற உயிர்கள் படும் துன்பத்தைக் கண்டால் மனம் இரங்க வேண்டும். உள்ளம் உருக வேண்டும். இதுதான் இரக்கம்.

இந்த அனுபவத்துடன் நின்றுவிடாமல் துன்பப்படும் உயிர்களின் துக்கத்தைப் போக்க முயல வேண்டும். தம்மால் முடிந்த வரையில் முயன்று அவ்வுயிர்களின் துன்பத்தைப் போக்க வேண்டும். அவை மகிழ்ந்து வாழும்படியும் செய்ய வேண்டும். இதுதான் இரக்கத்தின் செய்கை.

இரக்கமுள்ளவர்கள் வறுமை அடைந்தாலும் பிறருக்கு உதவப் பின்வாங்கமாட்டார்கள். துன்புறுகிறவர்கள் என்ன சாதி, என்ன நிறம் என்று எண்ணமாட்டார்கள். இவை அவர்கள் கண்களுக்குத் தெரியா. அவர்கள் படும் துன்பம் மட்டுமே தெரியும். ஆதலால் அவர்களுக்குத் தங்களால் ஆன உதவிகளைச் செய்வார்கள்.

இதுதான் இரக்கத்தின் உயர்ந்த தன்மை. இத்தகைய இரக்கம் உள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் எல்லாரும் சன்மார்க்கவாதிகள்தாம்.

இத்தகைய சன்மார்க்க அன்பர்களுடன் சேர்ந்து வாழ வேண்டும். அவர்களுடைய சேர்க்கையால் மகிழ்ச்சி அடையலாம். அன்பு உடையவர், அறிவு உடையவர் என்று அனைவரும் போற்றும்படி வாழலாம். இதை வள்ளலார் பல பாடல்களில் பாடியிருக்கிறார்.

தயைஉடையார் எல்லாரும் சமரசசன் மார்க்கம்
சார்ந்தவரே! இங்கவர்கள் தம்மோடுங்கூடி
நயமுறுநல் அருள்நெறியில் களித்துவிளை யாடி
நண்ணுகஎன்று எனக்கிசைத்த நன்புருசற் குருவே!
உயல்உறும்என் உயிர்க்கினிய உறவே! என் அறிவில்
ஓங்கியபேர் அன்பே! என் அன்பில்உறும் ஒளியே!
மயல் அறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றும்மணி மன்றில்
மா நடத்துஎன் அரசே! என் மாலை அணிந் தருளே!

'கருணை உள்ளவர்கள் எல்லாரும் சமரச சன்மார்க்க சங்கத்தவர்கள்தாம். இந்த உலகிலே அவர்களுடன் சேர்ந்து சிறந்த நல்ல அருள்நெறியிலே வாழ்ந்து, மகிழ்ந்து விளையாடுவாயாக' என்று எனக்குக் கூறிய உண்மையான குருவே! சாகாத என் உயிரோடு இணைந்திருக்கும் உறவே! என் அறிவிலே உயர்ந்து நிற்கும் பேரன்பே! என் அன்பிலே அமைந்து நிற்கும் ஒளியே! அருள் வளர்க்கும் தவத்திலே ஈடுபட்டவர்கள் சூழ்ந்து நின்று போற்றும் மெய்ப்பொருளே! அழகிய ஞான மன்றத்திலே ஆடும் அரசே! எனது பாமாலையை அணிந்து அருள்வாய்' என்கிறார் வள்ளலார்.

சன்மார்க்கத்தைச் சமரச சன்மார்க்கம் என்றே சொல்கிறார். சமரசம் என்பது பொது. எல்லாராலும் ஏற்றுக்கொள்ளக் கூடியத. ஆதலால்தான் சன்மார்க்கம் எல்லாருக்கும் பொதுவானது என்பதற்காக, சமரச சன்மார்க்கம் என்கிறார்.

மக்கள் வாழப் பிறந்தவர்கள். எல்லா இன்பங்களையும் அடைவதற்கு எல்லா மக்களுக்கும் உரிமை உண்டு. மக்கள் மாண்டுபோகப் பிறக்கவில்லை. மாண்டுபோக வேண்டுமானால் ஏன் பிறக்க வேண்டும்? 'பரலோகத்தில்தான் இன்பங்களை அடைய முடியும்; இகலோகத்தில் என்னதான் பாடு பட்டாலும் துன்பம்தான் இருக்கும்' என்பது தவறான கருத்து ஆகும்.

சமரச சுத்த சன்மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதன் மூலமாக மனிதன் இன்பமாக வாழ முடியும். இந்த உலகிலேயே பரலோக இன்பங்களையும் அவன் அடையலாம்; அடைய முடியும் என்கிறார் வள்ளலார்.

அகத்தே கறுத்துப் புறத்தேவெளுத்து
இருந்த உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத்து அடைவித்திட அவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்து
இடுதற் கென்றே எனைஇந்த
யுகத்தே இறைவன் வருவிக்க
உற்றேன், அருளைப் பெற்றேனே!

என்று பாடுகிறார்.

இந்த உலகில் உள்ளவர்கள் வெறும் ஆடம்பர மானவர்கள்; உள்ளத்தில் கறுத்தவர்கள்; வெளியில் மட்டும் வெள்ளையும் சள்ளையுமாகக் காட்சி தருகிற வர்கள். இத்தகையவர்களை எல்லாம் இவ்வுலகில் திருத்திச் சன்மார்க்கத்தில் சேர்ப்பேன். அவர்கள் இவ்வுலகத்திலேயே மறு உலகத்தின் இன்பங்களை எல்லாம் பெற்று மகிழ்வார்கள்.

இதைச் செய்வதற்காகவே நான் இவ்வுலகில் பிறந்திருக்கிறேன். இதற்காகவே இந்த யுகத்தில் இறைவன் என்னைப் படைத்தான். நானும் இந்த நோக்கத்துடனேயே அன்பையும் இரக்கத்தையும் துணையாகக் கொண்டு உழைக்கிறேன். எந்த நோக்கத்துடன் இறைவன் என்னை இந்த உலகத்துக்கு வருவித்தானோ அந்த நோக்கத்தில் பெருவெற்றி யும் அடைந்து வருகிறேன் என்கிறார். இதுதான் மேலே சொன்ன பாட்டின் பொருள்.

இவ்வுலக மக்களுடைய குற்றங்களைத் திருத்த முடியும். உள்ளத்திலே கறுத்த ஆடம்பரக்காரர்களே உலக மக்களை ஆட்டிப் படைக்கிறார்கள். அந்தத் துன்மார்க்கர்களை எல்லாம் சன்மார்க்கர்க ளாக்கிவிட்டால் போதும். எல்லா மக்களும் இகத் திலேயே பரத்தைப் பெற்றுவிடலாம். இந்தக் கருத் தையும் இந்தச் செய்யுள் குறிக்கிறது.

மக்களின் நன்மைக்காக உழைக்கும் அனைவரும் இத்தகைய உறுதியைப் பெறவேண்டும். 'என் கடன் பணி செய்து கிடப்பது. மக்கள் அனைவரையும் மகிழ்ச்சியுடன் வாழச் செய்ய முடியும். அவர் களுடைய இன்ப வாழ்வுக்குத் தடைகளாக இருக்கும் எல்லாவற்றையும் தகர்ப்பேன். இந்தத் துணிவை இறைவன் எனக்கு அருளியிருக்கிறார்' என்ற நம்பிக்கையுடன் பாடுபட வேண்டும். இந்த உயர்ந்த நெறியைத்தான் அருட்பிரகாச வள்ளலார் நமக்கு வழங்கியிருக்கிறார். *

## யார் நல்ல துறவி ?

ஓர் இஸ்லாமியத் துறவியும் ஹஜரத் இப்ராஹீம் என்னும் மகானும் சந்தித்துக் கொண்டார்கள். இப்ராஹீம் துறவியிடம், "நல்ல துறவிக்கான இலக்கணங்கள் யாவை?" என்று கேட்டார்.

துறவி : கிடைத்தால் சாப்பிடுவது, கிடைக்காவிட்டால் மகிழ்ச்சியுடன் இருப்பது துறவியின் இலக்கணம்.

இப்ராஹீம் (சிரித்துக் கொண்டே) : இதை ஒவ்வொரு நாயும்கூடச் செய்யுமே!

துறவி : அப்படியானால் தாங்கள்தாம் தயவுசெய்து நல்ல துறவிக்கான இலக்கணங் களைக் கூறுங்களேன்!

இப்ராஹீம் : கிடைத்தால் பகிர்ந்து உண்ணுவது, கிடைக்காவிட்டால் அதுவும் கடவுளின் திருவுள்ளம் என்று எண்ணிக் கொண்டு தவம் செய்வதற்கு நல்ல தரு ணத்தை இறைவன் அளித்திருக்கிறார் என்று தவம் இயற்றுவது துறவியின் இலக்கணம்.

துறவியும் இப்ராஹீமும் உயர்ந்த நிலையை அடைந்திருந்தார்கள். அவர்களின் வாழ்க்கை அனுபவமே அவர்களின் பேச்சில் எதிரொலித்தது.

—'நரேந்திரன்'

ஆன்மிக உயர்வைப் போற்றும் சமஸ்கிருத மொழி சிறப்பானது. உலக மொழிகளில் சமஸ்கிருதம் மிகவும் பழமையானது. இதன் இலக்கியம் மிகவும் பரவலானது. இதில் இல்லாத விஷயங்களே இல்லை.

டாக்டர் ஸர் எஸ். ராதாகிருஷ்ணன்





# சப்தரிஷிகளின் மாண்பு

'நரேந்திரன்'

> மகாபாரதம், ஸ்கந்த புராணம், பத்ம புராணம் ஆகிய மூன்றிலும் இடம் பெற்றுள்ள சுவையான கதை இது.

ஒரு சமயம் இந்தப் புவியுலகத்தில் தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகள் மழையே பெய்யவில்லை. உலகம் முழுவதையும் மெல்ல மெல்ல வறுமை பிடிக்கத் தொடங்கியது. மக்களும் கால்நடைகளும் மற்றப் பிராணிகளும் மரணம் அடையத் தொடங்கினுர்கள். மகா தபஸ்விகளான சப்தரிஷிகளுங்கூடப் பசிப்பிணியின் கொடுமை தாங்காமல் இங்கும் அங்கும் அலையலாயினர்.

இவ்விதம் உணவைத் தேடிப் புறப்பட்ட சப்த ரிஷிகள் விருஷாதர்பி என்ற அரசனின் நாட்டை அடைந்தார்கள்.

மகரிஷிகளின் வருகை பற்றிய செய்தியை அறிந்த விருஷாதர்பி தானே புறப்பட்டு அந்த முனிவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்து அவர்களை வணங்கினுன். அவர்களிடம், "முனிவர்களே! நான் உங்களுக்கு உணவு, இருப்பிடம், நெய், பால் போன்றவற்றைத் தருகிறேன். மேலும், பலவகையான ரத்தினங்களையும் தருகிறேன். தயவுசெய்து தாங்கள் அனைவரும் அவற்றை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

மன்னரின் வேண்டுகோளைக் கேட்ட ரிஷிகள் பின்வருமாறு கூறினுர்கள்:—

"அரசே! அரசனுல் தானமாகத் தரப்படும் பொருள்கள் தேனைப் போல இனிமை கொண்டவையாகக் காணப்படும். ஆனுல் அவற்றை ஏற்றுக்கொள்வதால் ஏற்படும் தீமை கொடிய விஷத்தைப் போலக் கொடுமையாக இருக்கும். இந்த உண்மையை அறிந்துள்ள நாங்கள் பேராசை வசப்பட்டுத் தாங்கள் கொடுப்பதை ஏற்றுக்கொள்ள மாட்டோம். அந்தணர்களின் உடல் தேவதைகள் வசிக்கும் வீட்டிற்கு ஒப்பானது. அந்தணன் தன் தவத்தினுல் தூய்மை உடையவனுகவும் திருப்தி கொண்ட உள்ளத்துடன் மகிழ்ச்சியாகவும் இருப்பானுனல் அவன் எல்லாத் தேவதைகளையும் மகிழச் செய்தவன் ஆகிறுன்.

"அந்தணன் ஒரு நாளில் எவ்வளவு தவத்தைச் சேமிக்கிறுனே அது அனைத்துமே, நன்ருகக் காய்ந்த காடானது ஒரு சிறிய நெருப்புப் பொறிபட்டுக் கணப்பொழுதில் எரிந்து சாம்பலாவதைப் போல, அரசனிடம் பெறும் தானத்தால் கணநேரத்தில் அழிந்தே போய்விடுகிறது. ஆகவே தாங்களே இந்தப் பொருள்களை வைத்துக்கொண்டு சுகமாக வாழுங்கள். யாராவது இந்தப் பொருள்களை ஆசைப்பட்டுக் கேட்டாலோ, அல்லது இந்தப் பொருள்கள் யாருக்குத் தேவைப்படுகின்றவோ அவர்களுக்கே கொடுத்து விடுங்கள். எங்களுக்கு எதுவுமே வேண்டாம்" என்று தெரிவித்தார்கள்.

இவ்விதம் சொல்லிவிட்டு ரிஷிகள் உணவைத் தேடி வேறு வழியாகக் காட்டுக்குள் நடக்க ஆரம்பித்தார்கள்.

ரிஷிகள் சென்றவுடன் அரசன் தன் அந்தரங்க அமைச்சர்களுடன் கூடிக் கலந்து ஆலோசித்தான். அதன்படி பெரிய பழங்களையுடைய ஒருவகையான அத்திப்பழங்களைக் கொண்டுவரச் செய்தான். அதற்குள் தங்கத்தைப் போட்டு நிரப்பி அவற்றை ரிஷிகள் செல்லும் பாதையில் போட்டுவிட்டு வரும்படித் தன் சேவகர்களை ஏவினுன்.

அரசனுடைய பணியாட்கள் மன்னன் கூறியபடியே உள்ளே பொன் நிறைந்த அத்திப்பழங்களை ரிஷிகள் செல்லும் பாதையில் அவர்கள் அங்குச் செல்வதற்கு முன்பாகவே போட்டுவிட்டு வந்தார்கள்.

ரிஷிகள் அந்த வழியாக வந்தபோது அத்திப் பழங்கள் கீழே விழுந்து கிடப்பதைக் கண்டனர்.

அத்ரி மகரிஷி குனிந்து ஒரு பழத்தை எடுத்தார். அத்திப்பழத்தின் கனம் அவருக்கு விந்தையாக இருந்தது. உடனே அவர் மற்ற ரிஷிகளிடம், "நம்முடைய மூளை இன்னும் மழுங்கிப் போய்விடவில்லை. பசி அதிகமாக இருந்தாலும் நாம் உறங்கியும் விடவில்லை. இந்த அத்திப்பழங்களுக்குள் பொன் இருக்கக்கூடும் என்று நினைக்கிறேன். நாம் இப்போது இவற்றை எடுத்துக்கொண்டால் மேலுலகத்தில் இதன்பொருட்டுக் கெட்ட முடிவை மேற்கொள்ள நேரிடும்" என்று கூறினுர்.

கடுமையான நெறிமுறைகளுடன் வாழும் ரிஷிகள் அத்திப்பழங்கள் இருந்த பாதையை விட்டு விலகி வேறு வழியாகச் சமத்காரபுரியை நோக்கி நடந்தார்கள்.

வழியில் அவர்கள் தற்செயலாக, சுனஸ்சகர் என்ற பெயரை உடைய ஒரு துறவியைச் சந்தித்தனர். அவரைச் சந்தித்த இடத்தில் ஒரு பெரிய ஏரி காணப்பட்டது. அந்த ஏரியின் மேற்பரப்பு முழுவதும் மாதவச் செல்வியின் முகமே போல அழகிய தாமரை மலர்களால் நிறைந்திருந்தது.

நீண்ட நேரம் அலைந்து திரிந்த களைப்புத் தீர, ரிஷிகள் அனைவரும் அந்த ஏரியின் கரையிலேயே உட்கார்ந்துவிட்டனர்.

அப்போது சுனஸ்சகர் ரிஷிகளை நோக்கி, ''மகரிஷிகளே! பசிப்பிணி எப்படிப்பட்டது என்பதைத் தாங்கள் அனைவரும் தயவுசெய்து எனக்குச் சொல்ல வேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

அதற்கு ரிஷிகள் சொல்ல ஆரம்பித்தார்கள்:

''கத்தி, ஈட்டி போன்ற பயங்கரமான போர்க் கருவிகளால் தாக்கப்பட்டால் மனிதன் எப்படித் துன்பப்படுவானோ அதைவிடவும் கொடியதாகப் பசியால் வாடும் மனிதனின் கஷ்டம் இருக்கும். வயிற்றில் உண்டாகும் பசி என்னும் தீயினால் உடலில் உள்ள நாடி நரம்புகள் உலர்ந்து போய் விடும், கண் இருட்டிவிடும், ஒன்றுமே தோன்றாது. புத்தி மந்தமாகிவிடும். பசி என்னும் நெருப்புக் கொழுந்து விட்டு எரியும்போது உயிரினங்கள் பேச்சற்றுப் போய்விடும், காது கேளாமல் செவிடு ஆகிவிடும், உணர்ச்சிகள் அற்று ஜடமாகிவிடும்; முடமாகிவிடவும் கூடும்.

''பசியால் வாடும் மனிதன் பயங்கரவாதியாகிறான். மரியாதை முறைகளையும் அவன் மறந்துவிடுகிறான். எனவே உணவுதான் உலகிலேயே மிகவும் சிறந்த பொருள். ஆகவே அன்னதானம் செய்பவர்கள் 'அக்ஷய திருப்தி', 'சநாதன நிலை' ஆகிய பெரும் பேறுகளை அடைகிறார்கள். சந்தனம், அகில், கோடைக் காலத்திலும் குளிர் காலத்திலும் செய்யப்படும் விறகுதானம் ஆகியவை அனைத்துமே அன்னதானத்தின் முன்னால் நிற்கமாட்டாமல் தோற்றுப்போகும்.

''தர்மம், தானம், யமம் ஆகிய இந்த மூன்றும் தான் முக்கியமான தர்மங்கள் ஆகும். இவற்றுள்ளுங் கூட, தமம் என்பது சிறப்பாக அந்தணர்களுக்கு உரிய சநாதன தர்மம் ஆகும். தமம் என்பது நம் தேஜஸை அதிகமாக்குகிறது. ஐம்பொறி அடக்கிய மனிதன் எங்கு வாழ்கிறானோ அவனுக்கு அந்த இடமே சிறந்த தவச்சாலையாக அமையும்.

''விஷயப் பற்றற்ற மனிதனின் மனதிலுங்கூடக் குற்றங்கள் தோன்றக்கூடும். ஆனால் எவன் சதா காலமும் நற்செயல்களைச் செய்வதிலேயே ஈடுபட்டிருக்கிறானோ அவனுக்கு அவன் வசிக்கும் வீடுகூடத் தபோவனம்தான். இலக்கணம் படித்துப் பெரிய பண்டிதன் ஆகிவிடுவதனால் மட்டும் மோட்சம் கிட்டிவிடாது. தனிமையில் தொண்டு புரிந்து, யமம் நியமம் ஆகியவற்றை அனுசரித்துக்கொண்டு, தியானத்தில் ஈடுபட்டுக்கொண்டிருக்கும் மனிதன் மட்டுமே மோட்சத்தை அடைய முடியும். வேத வேதாங்கங்களால்கூடப் புலனடக்க மற்றவனைத் தூய்மைப்படுத்திவிட முடியாது. தனக்கு எது கெடுதல் என்று படுகிறதோ அதைப் பிறருக்காகக்கூட, பிறர் விரும்பினாலுங்கூடச் செய்யக் கூடாது — இதுவே தர்மத்தின் சாரம் ஆகும்.

''எவன் பிறன் மனைவியைத் தாய்க்குச் சமமாகவும், பிறர் பொருளை மண்ணுக்குச் சமமாகவும், உலகிலுள்ள எல்லா உயிர்களிடமும் தன்னையே காண்கிறானோ அவனே சிறந்த ஞானியாக ஆகிறான். எல்லா உயிர்களிடமும் நல்ல எண்ணத்துடன் அவற்றின் நன்மையை மட்டும் விரும்புபவனே மோட்சத்தை அடைகிறான்.''

அதன் பிறகு சப்தரிஷிகள் ஏரியில் இறங்கிச் சிறிது தாமரைத்தண்டுகளை எடுத்து வர விரும்பினார்கள். அந்த இடத்திலுங்கூட விருஷாதர்பி மன்னனுடைய பணிப்பெண் ஒருத்தி காவல் இருந்தாள். அவள், சப்தரிஷிகள் விருஷாதர்பி அளித்த வெகுமதிகளை ஏற்றுக்கொள்ளாததால் அதைத் தன்னையே அவமதித்ததாகக் கருதி, அந்த ரிஷிகளைக் கொல்வதற்காகப் பிராம்மணர்களால் அனுஷ்டானம் செய்து அனுப்பப்பட்டவள் ஆவாள்.

சப்தரிஷிகள் அந்தப் பயங்கர அரக்கியை அங்குக் கண்டனர். அவளிடம், அவளது பெயரையும் அவள் அங்கு நின்றுகொண்டிருப்பதற்கான காரணத்தையும் விசாரித்தனர். யாதுதானி எனப்பட்ட அந்த அரக்கி அவர்களிடம், ''தபஸ்விகளே! நான் யாராக இருந்தால் என்ன? அதைப்பற்றி நீங்கள் கேட்க வேண்டிய அவசியம் இல்லை. நான் இந்த ஏரியின் காவற்காரி. அதை மட்டும் நீங்கள் தெரிந்துகொண்டால் போதும்'' என்று சொன்னாள்.

அரக்கியின் பதிலைக் கேட்ட ரிஷிகள் அவளிடம், ''பெண்ணே! நாங்கள் பசியால் மிகவும் துன்பப் படுகிறோம். ஆகவே நீ அனுமதி கொடுத்தால்

நாங்கள் இந்த நீர்நிலையிலிருந்து தாமரைத் தண்டு களை எடுத்துக்கொள்கிறோம்'' என்றார்கள்.

அதற்கு யாதுதானி, ''சரி, நீங்கள் அவ்விதமே எடுத்துக்கொள்ளலாம். ஆனால் ஒரு நிபந்தனை:— அது என்னவென்றால், நீங்கள் ஒவ்வொருவராக வந்து உங்களுடைய பெயரைச் சொல்லிவிட்ட பிறகுதான் இதற்குள் நுழையலாம்'' என்று கூறினாள்.

அவளுடைய பதிலைக் கேட்டவுடனே அத்ரி மகரிஷிக்கு, அவள் ஓர் அரக்கி என்பதும், அவள் தங்களைக் கொன்று தின்பதற்காகவே வந்திருக் கிறாள் என்பதும் புரிந்துவிட்டன. இருந்தாலும் மிகுந்த பசி காரணமாக அவதிப்பட்டுக் கொண்டி ருந்த அவர் அவளுக்குப் பதில் கூறினார்:—

''பெண்ணே! பாவத்தினால் கொடுமை செய்பவர் களை 'ஆராத்ரி' என்று சொல்கிறார்கள். பாவத் தினால் கெடுதல்கள் எதுவும் செய்யாமல் பாவத்திலி ருந்து தப்பித்துக்கொள்பவர்களை 'அத்ரி' என்று அழைக்கிறார்கள். பாவத்தின் பிரம்மாண்ட உருவ மாகிய இறப்பு என்பதிலிருந்து தப்பித்துக்கொண் டவன் என்பதனாலுங்கூட என்னை அத்ரி என அழைக்கிறார்கள்.''

யாதுதானி அத்ரியிடம், ''தேஜஸ்வியான மக ரிஷியே! தாங்கள் எப்படி எத்தனை தடவை தங்கள் பெயரின் அர்த்தத்தைச் சொன்னாலும் என் மண்டைக்குள் அதன் பொருள் ஒன்றுமே எட்டாது. பரவாயில்லை. நீங்கள் இப்போது குளத் தில் இறங்கலாம்'' என்று சொன்னாள்.

வஸிஷ்டரும் இதுபோலவே அவளிடம் தமது பெயரைப் பற்றி, ''என்னுடைய பெயர் வஸிஷ்டர். எல்லோரிலும் சிறந்தவன் என்ற காரணத்தால் என்னை 'வரிஷ்டன்' என்றும் சொல்கிறார்கள்'' என்று தெரிவித்தார்.

யாதுதானி அவரையும் உள்ளே போக அனு மதித்தாள்.

கச்யபர் கூறினார்—''உடலுக்குக் 'கச்ய' என்று பெயர். அந்த உடலை எவன் நன்கு பாதுகாக்கிறானே அவனுக்குக் 'கச்யபன்' என்பது பெயர். 'கு' அதாவது பூமியில், 'வம்' என்றால் மழை பொழியச் செய்வது. அத்தகைய வல்லமையுள்ள சூரியன்கூட என்னுடைய மறுஉருவம்தான். அதனால் நான் குவம் என்றும் அழைக்கப்படுகிறேன். பூசனிப்பூவைப் போல ஒளி வீசிக்கொண்டிருப்பதனால் 'காச்யர்' என்றும் என்னைத் தெரிந்து கொள்'' என்றார்.

இது போலவே சப்தரிஷிகள் எல்லோரும் தங்கள் பெயரின் பொருளைச் சொல்லிக்கொண்டே உள்ளே சென்றார்கள். ஆனால் அந்த அரக்கியால் ஒரு வருடைய பெயரையும் நினைவில் வைத்துக் கொள்ள முடியவில்லை.

கடைசியில் சுனஸ்சகரின் முறை வந்தது. அவர், ''யாதுதானி! இந்த மகரிஷிகள் தெரிவித்த முறை யில் நான் என் பெயரைச் சொல்ல முடியாது. தர்ம மூர்த்திகளாக விளங்கும் முனிவர்களின் தோழன் என்ற பொருளை உணர்த்தும் 'சுனஸ்சகன்' என்பது என் பெயர்'' என்று தெரிவித்தார்.

இதைக் கேட்டதும் யாதுதானி அவரிடம், ''தாங்கள் தயவுசெய்து மீண்டும் ஒருமுறை உங்கள் பெயரைச் சொல்லுங்களேன்'' என்று கேட்டாள்.

சுனஸ்சகர் அவளிடம், ''நான் என் பெயரை ஒரு தடவை சொல்லிவிட்டேன். நீ அதை மறந்துவிட்டு மீண்டும் சொல்லும்படி கேட்கிறாயே! என்னுடைய 'திரிதண்ட'த்தின் அடியால் எரிந்து சாம்பலாகு'' என்று சொல்லிக்கொண்டே ரிஷியின் வேஷத்தில் வந்திருந்த தேவேந்திரன் வஜ்ராயுதத்தால் ஒரே அடியில் அவளைக் கொன்றுவிட்டார்.

அவளைக் கொன்று சப்தரிஷிகளைக் காப்பாற்றிய பின்பு அவர் அவர்களிடம், ''நான் சன்னியாசி அல்ல. நான் இந்திரன். உங்கள் அனைவரையும் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தினால்தான் நான் துறவியின் வடிவத்தில் இங்கு வந்தேன். விருஷாதர்பியினால் அனுப்பப்பட்ட கொடூரமான அரக்கி இவள். உங்களைக் கொல்வதற்காகவே அந்த அரசனால் இவள் ஏவப்பட்டிருந்தாள். இவள் 'அக்கினி'யிலிருந்து தோன்றியவள். ஆகவே இவளைக் கொல்வதற்காகத்தான் இங்கே வந்து அவளைக் கொன்று போட்டேன். தவசிரேஷ்டர் களே! ஆசையை அறவே ஒழித்துவிட்ட காரணத் தினால் நீங்கள் அனைவருமே அக்ஷய லோகத்திற்கு* உரிமை உடையவர்கள் ஆகிறீர்கள். இப்போது நீங்கள் அனைவரும் இங்கிருந்து அக்ஷய லோகத் திற்குச் செல்லலாம்'' என்று தெரிவித்தார்.

முடிவில் சப்தரிஷிகள் இந்திரன் கூறியபடியே அவருடன் அக்ஷய லோகத்திற்குப் புறப்பட்டார்கள்.

---

* அக்ஷய லோகம் என்பது எந்தப் பொருளை எத்தனை எடுத் தாலும் குறையாமல் இருக்கும் தன்மையை உடைய உலகம்.

# உலகமே சிறந்த குரு

**சுவாமி அமரானந்தர்**

இந்த உலகம் மாறுபடும் தன்மையுடையது. ஆழ்ந்த சிந்தனையுடன் நோக்கும்போது எவ்வளவு அழகாக இது அமைந்திருக்கிறது என்பது தெரிய வரும். 'புவனம் கடந்த உள்ளத்தின் மேல் அழகு ஒழுக எழுதிய உயிரோவியம்' என்று இதை ஒரு பக்தர் வர்ணிக்கிறார். கணந்தோறும் மாறிக் கொண்டிருக்கும் இந்த உலகம் ஓர் உயிரோவியம் ஆகிறது. இந்தப் பிரபஞ்சத்தைப் பகவான் ஸ்ரீராம கிருஷ்ணர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :—

''இந்தப் பிரபஞ்சம் என்ற ஓவியத்தை உற்றுப் பாருங்கள். இதன் மகிமைதான் என்ன! எத்தனை எத்தனை பொருள்கள் இதில் அடங்கியிருக்கின்றன! சந்திரன், சூரியன், நட்சத்திரங்கள், எண்ணிறந்த உயிர்வகைகள், அவற்றுள் மிகப் பெரியவை மிகச் சிறியவை, நல்லவை கெட்டவை, வலிவு படைத்தவை மெலிந்திருப்பவை, ஆற்றலில் ஓங்கியிருப்பவை தாழ்ந்திருப்பவை—இவை யாவுமே வியப்புக்கு உரியவையாகும்.''

இன்றும் ஆழ்ந்து நோக்கும்போது, உலகம் ஒரு சர்வகலாசாலை போல ஜீவர்களுக்குப் பாடம் புகட்டிக் கொண்டே இருக்கிறது; மனிதன் மேன்மையடைவதற்கு உரிய பாடமும் புகட்டுகிறது. அதுவே கீழ்மையடையவும் போதிக்கிறது. இனி, கெட்டவையாகத் தென்படுகிறவையும் சாதகனுக்கு நல்ல பாடம் புகட்டுகின்றன. ''பாவிகள் மறைமுகமான ஆசிரியர்கள்'' என்று சுவாமி விவேகானந்தர் குறிப்பிட்டுள்ளார். எனவே இந்த உலகம் ஒரு நல்ல குருவாகிறது.

பூவுலகிலுள்ள நல்லவை கெட்டவைகளைச் சில உதாரணங்களின் மூலம் அறிந்து கொள்ளலாம். தாவர வகைகளில் நெல், வாழை, தென்னை மிகச் சிறந்தவையாக அமைந்திருக்கின்றன. அவை வாழ்வதற்கு அவசியமான எருவையும் நீரையும் மட்டும் நிலத்திலிருந்து எடுத்துக்கொள்ளுகின்றன. ஆனால் தங்களை முற்றிலும் உணவுக்காகவும் மற்ற உபயோகத்துக்காகவும் சமுதாயத்துக்குக் கொடுத்து விடுகின்றன. மிருக வகைகளில் பசு, எருது முதலானவையும் இந்த மரங்களைப் போலவே இருக்கின்றன. மனித சமுதாயத்தில் புத்தர், சங்கரர், ராம கிருஷ்ணர், விவேகானந்தர் போன்றவர்கள் அவ்விதம் வாழ்ந்திருக்கிறார்கள். அத்தகைய மேலோர் புகட்டிய பாடங்கள் கல்பாந்த காலத்துக்கு மனித சமுதாயத்துக்கு உபயோகமாக இருக்கின்றன.

இனி, கேடுகள் விளைவிப்பனவாகத் தாவர வர்க்கத்தில் முட்செடிகளும், மிருகங்களில் கொடிய விலங்குகளும் உள்ளன. மனித சமுதாயத்திலே தங்களுடைய ஆதிக்கத்திற்காகப் போரை உண்டாக்கி மக்களைப் பலி வைக்கும் வல்லரசுகளும் உள்ளன. ஜீவாத்மா ஒருவன் நல்லவற்றுடன் தொடர்பு வைத்துக்கொள்ளும்போது அவன் நல்லவனாகிறான். கெட்டவற்றுடன் தொடர்பு கொள்ளும்போது கேட்டைவரவழைத்துக்கொள்கிறான். ஆனால் விவேகி ஒருவன் கேடுடையவற்றை விலக்கி வைக்கும்போது அவற்றிலிருந்து நல்ல பாடம் கற்றுக் கொள்கிறான். இவ்விதம் நல்லவை கெட்டவையாகிய இருபத்துநான்கு பொருள்களிலிருந்து பாடம் கற்றுக்கொண்டதாகத் தத்தாத்திரேயர் என்ற மகான் குறிப்பிட்டுள்ளார்.



அவர் கூறிய இருபத்துநான்கு பொருள்களையும் அவை போதித்த உண்மைகளையும் அறிந்து கொள்ளலாம்.

**1. தரை :** இது பஞ்சபூதங்களில் ஒன்று. ஒருவனின் கால் மற்றொருவன் மீது படும்போது முதல்வன் மன்னிப்புக் கோருகிறான். தரையைப் பூமா தேவியாக வணங்குவதனால் காலை எழுந்தவுடன் அதன்மேல் பாதங்களை வைக்கும்போது 'விஷ்ணு பத்நி நமஸ் துப்யம் பாதஸ்பர்சம் க்ஷமஸ்வ மே' என்று காலைப் பிரார்த்தனை பாடப்பெறுகிறது.

பூமி எத்தனையோ பாதங்களால் மிதிபடுகிறது. மிதிபடுவதல்லாமல் கூர்மையான ஆயுதங்களைக் கொண்டு வெட்டுவதையும், உழுவதையும், வெடி வைத்துத் தகர்ப்பதையும், அணுகுண்டுச் சோதனையையும் தாங்கிக்கொண்டு பொறுமையாக இருக்கிறது. 'பொறுமைக்குப் பூதேவி' என்பது பழமொழி. பொறுமையோடு இருப்பதல்லாமல், சமூகத்திற்கு

வேண்டிய உணவையும், வாழ்க்கைக்கு உபயோக மான பொருள்களையும் உற்பத்தி செய்து கொடுக் கிறது. இவ்விதம் சகிப்புத்தன்மையும் தியாகத் தன்மையும் புகட்டுவதனுல் அந்தத் துறவிவேந்தர் தரையைக் குருவாக ஏற்றுக்கொண்டார்.

**2. புனல் :** இது நீர். உடல்தூய்மையை உண் டாக்குவதுடன் உள்ளத்தையும் தூய்மைப்படுத்து கிறது. கடல்போன்ற பரந்த நீர்நிலைகளைப் பார்க்கும் போது அது பரம்பொருளை நினைவூட்டுவதாகப் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

**3. கனல் :** இது நெருப்பு. பெருநெருப்பு, தன் னிடம் வந்தடையும் எண்ணெய், உலர்ந்த மரம், பச்சை வாழைத்தண்டு, குப்பைகூளங்கள் முதலான வற்றைப் பொசுக்கித் தன்மயம் ஆக்கிக் கொள் கிறது. அது போல, நல்லவை கெட்டவைகளைக் கண்டு சகித்துத் தன்மயம் ஆக்கிக் கொள்ளும் போது, தீயவையும் நன்மை பயக்கின்றன. தூய அன்னை ஸ்ரீ சாரதாதேவியாருக்குத் தனிவழியில் வந்த முரட்டுக் கள்வனும் உற்ற உறவினன் ஆகி விடுகிருன்.

**4. கால் :** காற்று. இது இனிய நறுமணத் தையும் வெறுப்புக்குரிய துர்நாற்றத்தையும் எடுத்துக் கொண்டு வீசுகிறது. ஆனுல், அந்த நாற்றங்கள் காற்றுக்கு உரியவையல்ல; வந்து கலந்தவை; சிறிது நேரத்தில் விட்டு விலகிவிடுகின்றன. அது போல, கர்மத்துக்குத் தன்னைக் கர்த்தாவாக்கிக் கொள்ளாமலும், அவற்றில் கட்டுப்படாமலும் இருக் கும்போது, சாதகன் கர்மபலனுக்கு ஆளாவதில்லை. தத்துவம் அறிந்தவன் எந்தக் கருமத்தைச் செய் தாலும் அதில் தன்னைக் கட்டுப்படுத்திக்கொள் வதில்லை. கசாப்புத் தொழில் செய்த வியாதன் புகட்டிய நல்லுபதேசம் ‘வியாத கீதை’ என்று வழங்கப்பெறுகிறது.

**5. வானம் :** ஆகாசம் அங்கு இங்கு எனுதபடி எங்கும் பரவி நிறைந்திருக்கிறது. பரம்பொருளை விளக்குவதற்கு வானத்தை உதாரணமாகச் சாஸ் திரங்கள் எடுத்துக்கொள்கின்றன. பரமாத்மா எங் கும் நீக்கமற நிறைந்திருக்கிருர் என்பதை இது உணர்த்துகிறது.

**6. தபனன் :** சூரியன். பல குடங்களிலுள்ள நீரில் சூரியனின் பிம்பங்கள் பலவாகத் தென்படு கின்றன. குடங்களிலுள்ள நீரை ஒவ்வொன்ருக அகற்றும்போது மூல சூரியன் ஒன்றே எஞ்சியிருக் கிறது. பகலவன் சுயஞ்சோதியாக விளங்குகிருன். இமைப்பொழுதும் மறைபடாமல் சுடரொளியாக இருக்கிருன். குடத்தில் இருந்த பிம்பங்களை நீக்கி யது போன்று, தோற்றத்திலுள்ள பிரபஞ்சத்தை ஒதுக்கிப் பார்க்கும்போது, எஞ்சுவது பரம்பொருளே ஆகும். அது இமைப்பொழுதும் மறையாமல் சுயஞ் சோதியாக விளங்குகிறது.

**7. வெண்திங்கள் :** சந்திரனிடம் களங்கம் இருப்பது போலத் தென்படுகிறது. ஆனுல் உண்மையில் அது களங்கம் அல்ல. உலகில் கேடு நிறைந்திருப்பதாகத் தென்படுவது பார்ப்பவர்களின் மனப்பாங்கைப் பொறுத்தது. உண்மையில் அங்கே கேடுகள் இல்லை. அது திருவருளின் செயல். ‘நேராக நிற்கும் திருவருளில் நிற்பதல்லால் கற்கும் நெறி வேறேது?’ என்கிருர் தாயுமானவர். எனவே, மனம் தூய்மையடையும் போது உலகிலுள்ள கேடுகள் கேடுகளாகத் தென்படுவதில்லை.

**8. வாரி :** கடலிலே எழும் சிறியனவும் பெரியனவுமான அலைகள் கடலுக்கு அன்னியமான வையல்ல. அன்னியம் போலத் தென்படும் அவை அடங்கியவுடன் கடல்மயம் ஆகிவிடுகின்றன. அது போல, ஜீவவியக்தி சிவனுக்கு அன்னியமான தல்ல. சித்தமலம் அறும்போது ஜீவன் சிவமாகிவிடு கிருன்.

**9. வரையுறை அரவு :** மலைப்பாம்பு. பெரிய உடலைப் பெற்ற மலைப்பாம்புகள் இரைதேடப் போவதில்லை. அவை, தாம் இருக்கும் இடத்திற்கு வரும் சிறு ஜீவ ஜந்துக்களை விழுங்கிப் பசியாறுகின் றன. அது போல, இருக்கும் இடம் தேடி உருக்க முடன் வரும் உணவைப் புசிப்பதே துறவியின் உயர்ந்த இலட்சியம் என்பதைப் பாம்பின் செய்கை புகட்டுகிறது.

**10. மான் :** இது செவியின்பத்துக்கு அடிமைப் பட்டு, வேடுவன் கையில் சிக்கிவிடுகிறது. வேடுவர் நாலாபக்கமும் நின்று ஒருவகை ஒலியை எழுப்பும் போது மான் எந்தத் திக்கில் ஓடுவதென்று அறி யாமல் பிரமித்து நின்றுவிடும்போது வேடுவர் கையில் சிக்கிவிடுகிறது. மான் போன்று குரல் கொடுத்தும் பிடித்துவிடுவதுண்டு.

**11. கான்வருகரி :** காட்டில் வசிக்கும் யானை ஸ்பரிச உணர்ச்சியால் மனிதனுக்கு அடிமை யாகிறது. பெண்யானையை நோக்கி உணர்ச்சி மேலிட்டு விரையும் ஆண்யானை, வழியில் வெட் டப்பட்டு மூடியிருக்கும் பொய்க்குழியில் விழுந்து, பிறகு மனிதனுக்கு அடிமையாகிறது.

**12. பதங்கம்** : காட்சிக்கு அடிமைப்பட்டு, எரிகிற விளக்கைப் பார்த்துப் பறந்தோடி, அதிலேயே விட்டில்பூச்சி விழுந்து மடிகிறது.

**13. மீனம்** : நாவாசையால் தூண்டப்பட்ட மீன், தூண்டிலில் உள்ள புழுவைப் புசிக்க முயன்று, தூண்டிலில் சிக்கி, மனிதனுக்கே உணவாகிறது.

**14. முரலளி** : வண்டு நறுமணத்தை நாடித் தாமரை போன்ற மலர்களில் அமர்ந்து மயங்கி அவற்றில் தங்கி மடிகிறது.

ஒவ்வொரு புலனுக்கும் ஆட்பட்ட மான் முதலான இந்த ஐந்து உயிர்களின் கதியே இவ்விதம் ஆகும்போது, ஐந்து புலன்களையும் புறத்தே ஏக விட்டு 'இன்பம்' நாடும் மனிதனின் கதி என்ன ஆவது என்ற சிந்தனை புலனடக்கத்தைப் புகட்டுகிறது.

**15. கணைசெய்கின்றோன்** : வேடன் பறவை ஒன்றைத் தன் கை அம்புக்கு இலக்காக்கக் குறி பார்க்கிறான். அப்போது அவன் காலடியில் தன்னைத் தீண்ட முயலும் பாம்பைக்கூடக் கவனிப்பதில்லை. இலட்சியத்தில் குறியாக இருக்கும் போது எந்த ஆபத்தையும் பொருட்படுத்தாமல் இருக்க வேண்டும் என்பதை இந்தக் காட்சி புகட்டுகிறது.

**16. மொழிதரு குமரி** : புதுமணப்பெண் தன் தோழிகளுடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது, வெளியே சென்றிருந்த நாயகன் அகத்துக்குள் பிரவேசிப்பதைக் கண்டவுடன், பேசுவதை நிறுத்தி மௌனமுற்றுவிடுகிறாள். 'மோனமென்பது ஞான வரம்பு' என்ற பாடத்தை மாதுவின் இந்தச் செயல் உணர்த்துகிறது.

**17. தேனீ** : எதிர்கால உணவிற்காகத் தேனீ சேர்த்து வைக்கும் தேன் மனிதனுக்கு ஆகாரமாகிறது. இது, 'நாளைக்கென்று எதையும் வைத்துக் கொள்ளக் கூடாது' என்ற துறவியின் இலட்சியத்தைப் புகட்டுகிறது.

**18. உரைதரு புரு** : பந்தபாசத்திலே மிகவும் ஈடுபட்டிருப்பது புரு இனம். வேடன்வலையில் சிக்குண்ட தன் மனைவியையும் குஞ்சுகளையும் கண்டு சகிக்காத ஆண்புரு தானும் அவ் வலையில் விழ்ந்து சிக்குண்டு வேடுவன் கைக்கு அகப்பட்டு மடிகிறது. இந்தக் காட்சி விவேகிக்குப் பந்தபாசத்தை விலக்குகிறது.

**19. தாசி** : குறிப்பிட்ட நாளில் யாரும் தன் இல்லத்துக்குப் பொருள் கொண்டு வரவில்லையே என்று வருந்தி, இரவு முழுவதும் கண்விழித்து வாசற்படியில் காத்துக்கொண்டிருந்த வேசியின் செயல், பொன்னாசையை நீக்குகிறது.

**20. ஊன்கவர் அன்றில்** : கழுகு. தனக்குக் கிடைத்த ஒரு மீனைக் கொத்திக்கொண்ட கழுகு ஒரு மரக்கிளையில் உட்கார்ந்ததைப் பார்த்த வேறு கழுகுகளும் காகங்களும் அதைச் சூழ்ந்துகொண்டு மீனைக் கவர்ந்துகொள்ள முயன்றன. இம்சையைப் பொறுக்கமாட்டாமல் அது மரத்தை விட்டுப் பறந்த போதும் மற்றவை விடாமல் துரத்திச் சென்றன. இந்தத் துன்பத்தைச் சகிக்காத அந்தக் கழுகு தன் வாயிலிருந்த மீனைக் கீழே போட்டுவிட்டு மரக்கிளைக்குச் சென்று அமைதியாக உட்கார்ந்து கொண்டது. மற்றவை அந்த மச்சத்தைக் கைப்பற்றப் போட்டியிட்டன. இது தனக்கெனப் பொருள் படையாமையைப் (அபரிக்ரஹம்) புகட்டுகிறது.

**21. நாகம்** : அரவம். தனக்கென உறைவிடம் அமைத்துக் கொள்வதில்லை. கிடைத்த வளையில் சுருண்டு படுத்துக் காலம் கடத்திவிடுகிறது. தனக்கென்று இருப்பிடம் வேண்டாமையை (அநிகேதம்) இது எடுத்துக்காட்டுகிறது.

**22. உறைந்த நூற்சிலம்பி** : தன் உடலிலே உள்ள ஒருவகைப் பசையான சத்தினாலே பட்டு நூல்வலை போன்ற ஒன்றை உண்டாக்கி, அதில் சிலந்திப்பூச்சி இருக்கிறது. மெய்ப்பொருளான இறைவன் உலகைப் படைத்துத் தானும் அதில் ஊடுருவியிருக்கிறான் என்பதைச் சிலந்தியின் செயல் அறிவிக்கிறது. மேலும், சிலந்தி அந்த வலையை மீண்டும் தன்னுள் செலுத்திக்கொள்வது போல், மெய்ப்பொருளும் ஜகத்தை மீண்டும் தன்னுள் அடக்கிக்கொள்கிறது.

**23. மைந்தன்** : ஆடை எதுவுமில்லாமலே குழந்தை இருக்கிறது. ஆடையில்லாமை என்ற உணர்வு அதனிடம் இல்லை. புலன்களை வெளியே விடாமல் அது தன்மயமாக இருப்பதனால் அதன் நிர்வாணத்தில் அழகும் இருக்கிறது. எனவே மற்றவர்கள் அன்புடன் அந்தக் குழந்தையை எடுத்து அணைத்துக்கொள்கிறார்கள். குழந்தை போன்ற இயல்பு அவதூதத் தன்மையை உண்டாக்குகிறது.

**24. ஊது வண்டெடுத்த கீடம் :** புழு ஒன்றைத் தன் கூண்டில் கிடத்தி, அதனைச் சுற்றித் தன் சுபாவமான ரீங்கார ஓசையை எழுப்பி, அந்தப் புழுவை வண்டு தன்மயமாக்குகிறது. இயற்கைத் தாய் ஜீவர்களைத் தன்மயமாக்கக் கணந்தோறும் இடைவிடாமல் பிரணவமான ஓங்கார ஒலியை எழுப்பிக்கொண்டே இருப்பதை இது புகட்டுகிறது.

இந்தப் பொருள்களில் ஒரு சில உடன்பாடாகவும், மற்றவை எதிர்மறையாகவும் பாடம் புகட்டிக் கொண்டே இருக்கின்றன. இந்தக் கருத்துக்கள் யாவும் அடங்கிய பாடல் இது :—

தரை, புனல், கனல், கால், வானம்,
தபனன், வெண் திங்கள், வாரி,
வரையுறை அரவு, மான், கான்
வருகரி, பதங்கர், மீனம்,
முரலலி, கணைசெய் கின்றோன்,
மொழிதரு குமரி, தேனீ,
உரைதரு புறவு, தாசி,
ஊன்கவர் அன்றில், நாகம்,
உறைந்தநூற் சிலம்பி, மைந்தன்,
ஊதுவண் டெடுத்த கீடம்,
சிறந்தன இவைநா லாறும்
சிந்தையில் குருவென் றுக்கி
மறந்தரு இவைகடி தாம் மற்
றவைநல னுமென்று இங்கு
அறிந்தனன் இன்ப முற்றேன்
அவ்வகை அரச கேண்மோ.

அவதூதராகிய தத்தாத்திரேயரின் தேஜஸ் மிகுந்த கம்பீரமான தோற்றத்தைக் கண்டு வியந்த யது மன்னன் அவரை அரண்மனைக்கு அழைத்து உபசரித்து, அவருடைய சாந்திக்குக் காரணம் வினவ, அந்தத் துறவிவேந்தர் தாம் இந்த இருபத்து நான்கு பொருள்களையும் குருவாகக் கொண்டதனுல் இந்த நிலை அடைந்ததாகக் கூறுகிருர். ★

---



தீயவர்கள் அச்சத்தினுல்தான் பணிவார்கள். நல்லவர்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் அன்புக்கே உண்டு.

—அரிஸ்டாட்டில்

தன்னலத் தியாகமும், தன் உரிமையை நிலைப்படுத்திக்கொள்ளாத தன்மையும் உலக நீதிகளில் உயர்வான நிதி.

—அறிவுரை

அறிவுக்கு வையகம் எப்போதும் வணக்கத்தைச் செலுத்தும். திறமைக்கு ஆதரவு தரும். தூய உள்ளத்தை வரவேற்கும்.

—இங்கர்சால்

ஒரு சகோதரியின் இதயம் கருணையின் கோயிலாக மாறும்போது அதற்கு இணையான வாஞ்சை இந்த உலகில் எங்குமே இல்லை.

—நி.வே. மாது

உலக மக்களே! நீங்கள் உதவாக்கரைகளாக நடமாட வேண்டாம். மனித சமுதாயத்திற்கு உதவி செய்யும் உத்தம மனிதர்களாக வாழுங்கள்; வாழ முயலுங்கள்.

—பட்டினத்தார்

பகவானுடைய சன்னிதியிலும், ஆசாரியனது முன்னிலையிலும், பாகவதர் முன்பும் கால்களை நீட்டக் கூடாது. இவர்களுடைய உறைவிடங்கள் உள்ள திக்கிலும் கால்களை நீட்டிப் படுக்கலாகாது.

—ஸ்ரீராமானுஜர்

இளைஞர்களே! நாட்டுக்கு நீங்கள் செய்ய வேண்டிய மகத்தான மிகப் பெரிய ஒரு பணி இருக்கிறது. மகத்தான ஒழுக்கப் புரட்சி உங்களால்தான் செய்யப்பட வேண்டும் என்று தேசம் காத்திருக்கிறது. பேராசையையும் மோசடியையும் மக்கள் வெறுக்கச் செய்ய வேண்டும். அந்தப் புரட்சிக்கு நீங்கள் தாம் தலைவர்களாக இருந்து நடத்த வேண்டும். அதை அரசியலார் நடத்த முடியாது.

—ராஜாஜி



# பொன்மலை

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்.

சிவபெருமான் வீரர்களுக்குள் பெருவீரன், அடியவர்களுடைய ஆணவத்தைப் போக்கக் கங்கணம் கட்டிக்கொண்டவன். அஞ்ஞான இருளை நீக்கும் ஞானசூரியன். காலபயத்தை நீக்கி மரணமில்லாப் பெருவாழ்வை அருளும் காலகாலன். அவனுடைய பராக்கிரமச் செயல்களைப் புராணங்கள் பலபடியாக விரித்துக் கூறுகின்றன.

பராக்கிரமச் செயல்கள் என்றும், கருணைச் செயல்கள் என்றும் அவனுடைய திருவிளையாடல்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். தீய சக்திகளை ஒடுக்கும் செயல்கள் வீர விளையாடல்கள்; அவை அவனுடைய வீரத்தைக் காட்டுபவை. அடியார்களுக்கு அருள்புரியும் திருவிளையாடல்கள் பல. அவை அவனுடைய கருணையைக் காட்டுபவை. வீரமும் ஈரமும் ஒருங்கே அமைந்த அப்பெருமானிடம் அம்பிகை இணைந்திருக்கிறாள். வீரம் அவன் திருவுருவம் ஆனால், ஈரம் அவள் திருவுருவம்.

வீரம் தோன்ற அவன் செய்த வீர விளையாடல் பல ஆனாலும் அவற்றுள் எட்டைச் சிறப்பாக எடுத்துச் சொல்வார்கள். அந்த எட்டுச் செயல்களையும் நினைப்பூட்டும் தலங்கள் எட்டு, தமிழ்நாட்டில் உள்ளன. அவை அவனது வீரத்தைக் காட்டும் தலங்கள்; வீரஸ்தானங்கள். மூலஸ்தானம் என்பது மூலட்டானம் என்று வரும். அவ்வாறே வீரஸ்தானம் என்பது வீரட்டானம் என்று தமிழில் வழங்கும். எட்டு வீரட்டானங்கள் உண்டு. அவற்றை அட்ட வீரட்டம் என்று சொல்லுவது வழக்கம்.

கஜாசுரனைச் சங்காரம் செய்தது ஒரு வீரச்செயல். யானைவடிவில் வந்த அசுரனால் உலகத்துக்குப் பெருந்தீமை விளைந்தது. அதைப் போக்க அவனை அழித்து அவன் தோலைப் போர்த்துக்கொண்டான் இறைவன். அகங்காரத்தை யானையாக உருவகம் செய்வர். அகங்காரத்தைப் போக்குபவன் என்ற கருத்தை அந்த வீரச் செயல் புலப்படுத்துகிறது. யானைத்தோலைப் போர்த்தவன் என்று அன்பர்கள் அடிக்கடி பாடுவார்கள். அதனால் கிருத்திவாஸன் என்ற திருநாமம் சிவபெருமானுக்கு அமைந்தது. இந்தப் பராக்கிரமச் செயலை நினைப்பூட்டுவது மாயூரத்தின் அருகில் உள்ள வழுவூர் என்ற தலம். வழுவை என்பது யானைக்கு ஒரு பெயர். அதை உரித்துப் போர்த்ததை நினைவு கூரச் செய்யும் அந்தத் தலத்தின் பெயர் வழுவையூர்; அதுவே மாறி வழுவூர் ஆயிற்று.

யானை உரி போர்த்து விளங்கும் சிவபெருமான் திருக்கோலத்தை இப்போது நினைத்துப் பார்க்கிறார் காரைக்காலம்மையார். அந்தக் கோலத்துக்கு உவமை சொல்லப் புகுகிறார்.



அவனுடைய திருவுருவம் செம்பொன்னைப் போல ஒளிர்கிறது. அவனுடைய பெரிய வடிவம் செம்பொன்னாலான மலையைப் போலத் தோன்றுகிறது.

> ''பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம்
> மேனி பொலிந்திலங்கும்''

என்று சேரமான் பெருமாள் நாயனாரும்,

> ''பொன்னார் மேனியனே''

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளும் பாடுவார்கள்.

அந்தப் பொன்மலை செவ்வண்ணக் கதிர்களை வீசிக்கொண்டு நிற்கிறது. தேவர்கள் எல்லோரும் ஒளிபடைத்த மேனியை உடையவர்கள். இறைவனே தேவர்களுக்கெல்லாம் பெரிய தேவனாகிய மகாதேவன். அவனுடைய திருமேனி கோடி சூர்யப் பிரகாசம் உடையது. சோதிவடிவினன் அல்லவா?

பொன்மேனியின் ஒளி கண்ணைக் கூசச் செய்கிறது. சூரியனைப் பார்க்கும்போது கண் கூசும். அதற்காகப் புகைபடிந்த கண்ணாடியை வைத்துக் கொண்டு அவனைப் பார்ப்பார்கள். சூரியகிரகணம் உண்டாகும்போது இவ்வாறு பார்ப்பது வழக்கம்.

சுடர் வீசும் இறைவனுடைய பொன்மேனியைக் காண வேணுமானால் அடியார்கள் புகைபிடித்த கண்ணாடியைக் கொண்டு பார்க்க வேண்டும். அவ்வாறு கண்ணாடியைத் தேடி அலையாமல் இறைவனே ஒரு காரியத்தைச் செய்கிறான். மேலே கரிய போர்வை ஒன்றைப் போர்த்துக்கொண்டு நிற்கிறான்.

அந்தப் போர்வை அவன் திருமேனி ஒளியை மட்டுப்படுத்துகிறது.

உலகத்தோருக்குத் தீங்கு புரிந்த கஜாசுரன் அஞ்ஞானம் உடையவன்; மதிமயக்கம் உடையவன். மதம்பிடித்த யானையாக வந்தான். தன் துதிக்கையை வீசிக்கொண்டு கண்டவர் யாவரும் அஞ்சும்படி வந்தான். யானைக்குத் துதிக்கையில் பலம். அதனால் அதைக் கையையுடைய விலங்கு என்று அடையாளம் காட்டுவார்கள்; கைம்மா என்பார்கள். கஜாசுரன் மதம் பிடித்த ஆண்யானை.

கைம்மா மதகளிறு.

அதைக் கொன்று அதன் கரிய தோலை இறைவன் போர்த்துக்கொண்டான். அகங்காரத்தை அழிப்பவன் தான் என்பதை யாவரும் உணர்ந்து, அதைப் போக்கிக்கொள்ள விரும்பும் அடியார்கள் தன்னை வணங்கி அருள் பெறட்டும் என்ற திருவுள்ளத்தோடு அவன் அந்தக் கோலத்தில் நிற்கிறான்.

அவ்வாறு யானையின் தோலைப் போர்த்துக்கொண்டு மிகப் பழங்காலத்தில் நின்றான்.

மால்ஆய
கைம்மா மதகளிற்றுக்
கார் உரிவை போர்த்தபோது
அம்மான் திருமேனி அன்று.

அந்தக் கோலம் எப்படி இருக்கிறது? அதற்கு உவமை சொல்ல வருகிறார்.

ஒரு பொன்மலை. அது கண்ணைக் கூசும் ஒளியைப் பரப்பிக்கொண்டு நிற்கிறது. அதன் உயரத்தையும் பரப்பையும் ஒரே கண் கொண்டு பார்க்க முடிவதில்லை. அதன் மேலே படர்ந்து மிதந்து வந்த கரிய மேகங்கள் அந்த மலை முழுவதையும் மறைத்துக்கொண்டு நிற்கின்றன. இப்போது பார்த்தால் மேகங்கள் முதலில் தெரிகின்றன. சற்றுக் கூர்ந்து பார்த்தால் அந்த மேகங்களினூடே பொன்மலை தெரிகிறது. இப்போது கண் கூசுவதில்லை. அதை நன்றாகப் பார்க்கலாம்.

அத்தகைய நிலையில் உள்ள பொன்மலையைப் போல இறைவன் தோன்றுகிறான்.

மேலாய மேகங்கள்
கூடிஓர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தால்
ஒவ்வாதே?

'இறைவன் திருக்கோலக் காட்சிக்கு இது உவமையாகாதா?' என்று கேட்கிறார் அம்மையார்.

இதற்குள் ஒரு கருத்துப் புதைந்து நிற்கிறது. நான் என்னும் அகந்தை ஒழிந்தால்தான் இறைவனுடைய காட்சி நமக்குக் கிடைக்கும். அந்த அகந்தையை நாமே நீக்கிக் கொள்ளலாம் என்று முயன்றால், நம்மால் முடியாத காரியம். அவன் திருவுள்ளம் கொண்டு அதை அழித்து அருள் புரிய வேண்டும். அப்போது அவனைக் காண முடியும். முதலில் அவனைக் காண முடியாமல் தடுக்கும் தடையை அவனே நீக்கிப் பிறகு தன்னைக் காட்டிக்கொள்கிறான். இந்தக் கருத்தை இந்தக் காட்சி காட்டுகிறது. தன் முழு ஒளியையும் காணக் கூசுபவர்கள், எளிதில் கண்டு நலம் பெறட்டும் என்று போர்வையைப் போர்த்துக் கொண்டு நிற்கிறான். அடியார்களுக்குத் தன்னைக் காட்டி நலம் செய்ய வேண்டும் என்ற பெருங்கருணையால் இப்படிச் செய்கிறான்.

மேலாய மேகங்கள்
கூடிஓர் பொன்விலங்கல்
போலாம் ஒளிபுதைத்தால்
ஒவ்வாதே?—மால்ஆய
கைம்மா மதகளிற்றுக்
கார்உரிவை போர்த்தபோது
அம்மான் திருமேனி அன்று.

[மயக்கமே தன் உருவாக வந்த துதிக்கையையுடைய விலங்காக, மதம்பிடித்த யானையாக வந்த கஜாசுரனைச் சங்காரம் செய்து, அந்த யானையின் கரிய தோலை அந்தப் பழங்காலத்தில் இறைவன் போர்த்துக்கொண்ட போது, அவன் திருமேனி, மேலே படர்ந்த கரிய மேகங்கள் ஒன்றாகக் கூடி ஒரு பொன்மலையில் வீசிய மிக்க ஒளியை மறைத்தால் அமையும் காட்சியை ஒத்திருக்காதோ?

மேல்ஆய-மேலே படர்ந்த. பொன்விலங்கல்-பொன்மலை. பயணம் செய்பவர்களுக்குக் குறுக்கே தடுத்து நிற்பது போல இருத்தலால் மலைக்கு விலங்கல் என்ற பெயர் வந்தது; விலங்கல்-தடுத்தல். அந்தத் தொழிற்பெயர் ஆகுபெயராய் நின்று மலைக்கு ஆயிற்று. போல்: அசை; அதற்குப் பொருள் இல்லை. பொன் விலங்கல் ஆம் ஒளி என்று கூட்ட வேண்டும். புதைத்தல்-மூடி மறைத்தல். மால்-மயக்கம். கைம்மா-யானை. கார்-கருமை உரிவை-தோல். அம்மான்-இறைவன். அன்று-அந்தப் பழைய காலத்தில்; பண்டறி சுட்டு.

திருமேனி புதைத்த காட்சியை ஒவ்வாதோ என்றபடி.]

**இது அற்புதத் திருவந்தாதியில் வரும் 60-ஆவது திருப்பாடல்.** ✖

# அன்னையின் அறிவுரைகள்

அ. லெ. நடராஜன்



ஆனந்தம் என்பது புறத்திலிருந்து வருவதா, அகத்தினின்று பிறப்பதா என்பது முககியமான கேள்வி. ஆனந்தத்துக்குப் பிறப்பிடம் அகமேயன்றிப் புறமன்று என்பது வேதாந்திகளின் கோட்பாடு. தன்னுள் இருக்கும் ஆனந்தத்தை அறியாமல், அறியமுயலாமல், மனிதன் அதைத் தேடிக்கொண்டு புறத்தே ஓடி அலேகிருன். இது அறியாமையாகும்.

இந்த உண்மையை ஓர் உதாரணத்தைக் கூறி, பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் விளக்கியுள்ளார். அந்த விளக்கத்தையே பிறருக்கும் தம் சீடர்களுக்கும் அன்னே ஸ்ரீசாரதாதேவியார் கூறுவது வழக்கம்.

ஒரு சமயம் அன்னேயார் ஆரா மாவட்டத்தில் தமது பெண் அடியார்களுடன் இரண்டு மாதகாலம் தங்கினர். அந்தப் பிரதேசத்தில் மான்கள் திரிவதையும் அவை அதிக வேகமாகத் துள்ளிக் குதித்து ஓடுவதையும் கண்டு அதிசயித்தார். உடனே மானே வைத்து ஸ்ரீகுருதேவர் கூறின விளக்கம் அவர் நினேவுக்கு வந்தது. குருதேவரின் வாக்கியத்தைப் பின்வருமாறு அவர் சொன்னர்:—

''மானின் நாபியில் கஸ்தூரி உண்டாகிறது. அந்தக் கஸ்தூரியின் நறுமணத்தில் நாட்டம் கொண்டு மான்கள் அங்கும் இங்கும் ஓடி அலேகின்றன. அந்த மணம் எங்கிருந்து வருகிறது என்பதை மான்களால் அறிந்துகொள்ள முடிவதில்லே. இதைப் போலவே, பகவான் மானுட சரீரத்தில் வசிக்கிருர்; ஆயினும் இந்த உண்மையை மனிதன் அறிவதில்லே. அதனுல் அவன் ஆனந்தத்தை இங்குமங்கும் தேடியலேகிருன். இறைவன் தன்னுள் இருப்பதை மனிதன் அறிவதில்லே.''

ஆனந்தம் என்பது அகத்தின் விளேவு. ஆன்மிகத்தின் இந்த அடிப்படை உண்மையை இந்த எடுத்துக்காட்டின் மூலம் நாம் தெரிந்துகொள்கிரேம்.

''காலக்கிரமத்தில் மனமே ஒருவனுக்குக் குருவாகிறது. மனதை ஒருமுகப்படுத்தி, முழுமனதுடன் இறைவனே இரு நிமிடங்கள் தியானிப்பது, பல வழிகளில் மனதை அலேயவிட்டு, நீண்டநேரம் செய்யும் தியானத்தைவிட மேலானதாகும்'' என்பது அன்னேயின் கருத்தாகும்.

எந்த வேலேயையும் அரைகுறையாகச் செய்யக் கூடாது. முழு மனதுடன் தோய்ந்து செய்தால் உரிய பலன் கிட்டும் என்பது கருத்து.

மனிதர் ஒருவருடன் ஒருவர் தொடர்பு கொள்ள ஆதாரமாய் இருப்பது அன்பு. அன்பு இல்லாத இடத்தில் சமுதாய ஒற்றுமை ஏற்படாது. அதனுல்தான் அன்பை ஆன்மிகச் செல்வர்கள் மிகவும் உயர்த்திப் பேசுகிருர்கள். அன்பின் சிறப்பை அன்னேயார் இவ்வாறு கூறியுள்ளார்:—

''அன்பில்லாதவனே மனிதன் என்று கூறக் கூடாது; மிருகம் என்றே கூற வேண்டும். அன்பு காரணமாகச் சில சமயங்களில் என்னே நானே மறந்துவிடுவது உண்டு. நான் என்ற நினேப்பே சிறிதும் இருப்பதில்லே.''

'கடவுளேக் காண முடியுமா, முடியாதா?' என்பது ஒரு கேள்வி. 'காண முடிந்தால், அதனுல் ஒருவன் அடையும் மேன்மை என்ன?' என்பது மற்றெரு கேள்வி. முக்கியமான இந்த இரண்டு கேள்விகளுக்கும் அன்னேயார் அடியில் வருமாறு பதில் கூறியிருக்கிருர்: –

''கடவுளேத் தரிசிக்கிறவனுக்கு என்னநேருகிறது? இரண்டு கொம்புகளா அவனுக்கு முளேக்கின்றன? இல்லவே இல்லே. பின்னே என்ன? சத்தியத்தையும் அசத்தியத்தையும் வேறுபடுத்திக் காணும் பகுத்தறிவு அவனுக்கு ஏற்படுகிறது. ஆன்மிக உணர்ச்சி உண்டாகி, வாழ்க்கைக்கும் மரணத்துக்கும் அப்பால் அவன் போய்விடுகிருன். நமது சித்தத்தினுள்ளேயே கடவுளே நாம் காண்கிரேம். வேறு எந்த வழியில் ஒருவன் கடவுளேக் காண முடியும்?''

ஒருவனின் அகத்தினுள்ளேயே கடவுள் உறைகிருர் என்ற உண்மையை இந்த வசனம் வலியுறுத்துகிறது.

கடவுள் இந்த உலகை எவ்வாறு படைக்கிறார்? கண், காது, மூக்கு, வாய் ஆகியவற்றை ஒவ்வொன்றாக வரைந்து, ஓவியன் ஒருவன் ஓவியத்தைப் பூர்த்தி செய்வது போல, ஜீவராசிகளைக் கடவுள் படைக்கிறாரா அல்லது நினைத்த மாத்திரத்தில் படைத்துவிடுகிறாரா? இதற்குப் பின்வரும் பதிலை அன்னையார் கூறியுள்ளார்:—

"கடவுள் மனிதனை, ஓவியன் போலவோ, பொம்மை செய்பவன் போலவோ கண் காது மூக்கு என ஒவ்வொன்றாகப் படைப்பதில்லை. நினைத்த மாத்திரத்தில் அனைத்தையும் அவர் படைத்து முடித்துவிடுகிறார். அவர் உம் என்றால் உலகம் தோன்றும்; மீண்டும் உம் என்றால் உலகம் உடனடியாக மறைந்துபோகும். உலகில் இருப்பன யாவும் ஒரே சமயத்தில் ஒன்றாக உண்டாயின; ஒன்றன் பின் ஒன்றாக அவை உண்டாகவில்லை."

"ஒருவனுக்கு இறைக் காட்சி எப்பொழுது கிட்டும்? ஜபம், தியானம், சாதனை, வழிபாடு இவற்றால் ஒருவன் அடையும் பலன் என்ன?" என்று அன்னையிடம் சீடர் ஒருவர் கேட்டார்.

அதற்கு அன்னை, "ஆத்மிகச் சாதனைகளின் மூலம் பழைய வினைப்பிடிப்புகள் அறுபட்டுப் போகின்றன. பக்தியுணர்வின் மூலமே ஒருவன் பகவத் தரிசனத்தைப் பெற முடியும். ஜபம், தியானம் இவற்றின் மூலம் பொறிபுலன்கள் அடக்கப்படுகின்றன" என்றார்.

மறு பிறப்புக்கு வித்தாக இருப்பது அவாவே என்னும் கருத்தைப் பின்வருமாறு அன்னை வெளியிட்டுள்ளார்:—

"ஆசை இருக்கும் வரையில் மனிதனுக்கு ஏற்படும் பிறவிகளுக்கு முடிவே இராது. மீண்டும் மீண்டும் பிறவிகள் எடுப்பதற்குக் காரணமாக இருப்பவை ஆசைகள்தாம். கற்கண்டு தின்ன வேண்டும் என்ற ஆசைகூட மனிதனுக்கு மறுபிறவியைக் கொடுக்கும். ஆசையை நுட்பமான ஒரு வித்துக்கு ஒப்பிடலாம். புள்ளியை விடப் பெரியதாய் இராத சிறிய ஒரு விதையிலிருந்து பெரிய ஆலமரம் உண்டாகிறது. அதேபோல ஒருவனுக்கு ஆசை இருக்கும் வரையில் மறுபிறப்பு ஏற்பட்டே தீரும்."

'அவாஎன்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவாப் பிறப்பீனும் வித்து' என்னும் குறள் இங்கே ஒப்பு நோக்கிச் சிந்திக்கத் தக்கது.

---

நீர் ஆவியோடு மலைமேல் மேகமாக அலைந்து மழையாகப் பெய்து மறுபடியும் நதிகளாகிக் கடலிலே கலக்கிறது. அது போல் ஜீவர்களும் தூக்கத்தில் தாம் என்ற உணர்வை இழந்து பூர்வவாசனைக்குத் தக்கபடி மீண்டும் வெளியே வருகிறார்கள். அப்படியே இறப்பிலும் அந்த வாசனையோடு கூடிய ஜீவர்கள் அழிவுறுவதில்லை. வெட்டிய மரத்தின் கிளைகள் மீண்டும் தளிர்கின்றன. அதன் வேர்கள் அழியாமல் இருக்கும்வரையில் மரம் தளிர்த்துக்கொண்டே இருக்கும். மரத்துக்கு ஜீவ வாசனை அழிவதில்லை. அஞ்ஞானம் கவ்வி இருக்கும் வரையில் ஜீவனுக்கு பிறவிகள் தொடர்ந்துகொண்டே இருக்கும்.

—ரமணமகரிஷி



வறுமைதான் உண்மை உறவினரை அளக்கும் அளவுகோல்.

—தெய்வப்புலவர்



நியாயமான ஆகாரத்தை உட்கொண்டு உறுதியான நிலையில் நின்று ஒரே நோக்கத்தோடு செய்யும் தியானமே உண்மையான உபாசனை. இப்படி இல்லையேல் அது கணவன் இல்லாத மனைவி போல் வெறுமையானது.

—துளசிதாசர்

அன்பு நிலத்தில் விளைவதில்லை, சந்தையில் விற்பதில்லை. மற்றவரின் அன்பை விரும்புகிறவன், ராஜாவானாலும் சரி, பிரஜையானாலும் சரி, தன் தலையையே தந்து அதைப் பெறவேண்டியிருக்கிறது.

—கபீர்

மனிதரின் இன்னலைக் கண்டு மனிதன் கண் கலங்காவிட்டாலும் இயற்கை அன்னை கண் கலங்குகிறாள்.

—வேர்ட்ஸ்வொர்த்

# சுவேதாச்வதர உபநிஷதம்



'அண்ணா' சுப்ரமணியம்

**சா**ங்கியம், யோகம், மாயாதத்துவம் ஆகியவை பற்றிய உண்மைகள் ச்வேதாச்வதர உபநிஷதத்தில் இடம் பெற்றுள்ளன. உபநிஷதம் குறிப்பிடும் ஆறு அத்தியாயங்களில் உள்ள கருத்துக்களின் சாரம் முழுவதும் சுருக்கமாகக் கட்டுரை வடிவில் இங்குத் தரப்படுகிறது.

## 1

'இந்த உலகிற்கு ஆதிகாரணம் எது? எங்கிருந்து நாம் தோன்றுகிறோம்? எதனால் உயிர் வாழ்கிறோம்? நாம் சென்று சேரும் இடம் எது? எந்தச் சக்தியால் தூண்டப்பெற்று இந்தத் துன்பமாகிய கட்டுப்பாட்டில் இருந்துகொண்டிருக்கிறோம்?' என்ற கேள்விகளுடன் சுவேதாச்வதர உபநிஷதம் துவங்குகிறது.

காரணம் என்று கருதப்படும் காலம் முதல் ஜீவன் வரையிலும் உள்ள எல்லாவற்றையும் அடக்கியாண்டுகொண்டு நிலைபெற்றுள்ள ஒன்று எதுவோ அதுவே அந்தச் சக்தி ஆகும். அது பரப்பிரம்மம் என்றும், பரமாத்மா என்றும் ஞானிகளால் கூறப்படுகிறது.

அறிபவனும் அறியப்படுவதும் ஆள்பவனும் ஆளப்படுவதும் ஆகிய இரண்டும் பிறப்பற்றவை. அனுபவிக்கப்படுவதற்கும் அநுபவிப்பதற்கும் உறவைக் கற்பிக்கும் ஒருத்தியாகிய மாயையும் பிறப்பற்றவளே ஆவாள். எப்போது இந்த மூன்றையும் பிரம்மம் என்று ஒருவன் அறிகிறானோ அப்போது அவன் அளவுகடந்து எங்கும் வியாபித்த ஆத்மாவாகவும் எல்லா வடிவங்களிலும் விளங்குபவனாகவும் செயல் எதுவும் அற்றவனாகவும் ஆகிறான்.

எள்ளினுள் எண்ணெய் போலவும், தயிரினுள் நெய் போலவும், ஊற்றுக்களில் நீர் போலவும் அரணிக் கட்டையில் அக்கினி போலவும் இந்தப் பரமாத்மா ஜீவாத்மாவிடம் மறைந்து காணப்படுகிறது. சத்தியத்தையும் தவத்தையும் கைக்கொண்டு எவன் தொடர்ந்து பரமாத்மாவைக் காண முயல்கிறானோ அவனுக்கே அந்தப் பரமாத்மா புலனாகிறது.

## 2

**சா**தகன் ஆத்மஞானத்தை அடைவதற்காக முதலில் மனதையடக்கி ஞானப்பயிற்சியை மேற்கொள்கிறான். பிரகிருதியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்கிறான். முடிவில் எங்கும் வியாபித்தவனும் பெரியவனும் எல்லாம் அறிந்தவனும் சுயம் பிரகாசனுமாகிய பகவானை அடைகிறான். அழியாத அமரத்துவ வாழ்க்கையின் செல்வப்புதல்வர்களாகிய எல்லோரும், தேவலோகத்தில் வாழும் தேவர்களுங்கூட இந்த உபதேசத்திற்குச் செவிசாய்க்கட்டும் என்று ரிஷி கூறுகிறார்.

ஞானமாகிய அக்கினி எங்கே கடைந்தெடுக்கப்படுகிறதோ, பிராணாயாமத்தால் வாயு எங்கே அடைக்கப்படுகிறதோ, ஆனந்தமாகிய சோமரஸம் எங்கே பொங்கி வழிகிறதோ, அங்கே மனம் புதிய பிறவியை அடைகிறது. அப்போது பிறவியின் வித்து நசித்துப்போய், இருவினைகளின் தொடர்பும் நீங்கிவிடுகிறது.

மார்பு, கழுத்து, தலை ஆகிய மூன்றையும் நேராக நிறுத்தி, உடலைச் சமநிலையில் வைத்து, இந்திரியங்களை மனதினால் இழுத்து இதயத்தில் புகுத்திப் பிறவிச் சுழல்களைப் பிரம்மமாகிய தெப்பத்தால் கடக்க வேண்டும்.

இந்திரியங்களின் சேஷ்டைகளையும் பிராணனுடைய வியாபாரங்களையும் அடக்கி, அறிவாளியானவன் கவனக் குறைவில்லாமல், துஷ்டக் குதிரை பூட்டிய வண்டியைப் போல உள்ள மனதை அடக்கி நடத்த வேண்டும்.

சமமானதும், பரிசுத்தமானதும், பருக்கைக் கற்கள், நெருப்பு, தூசு, சந்தடி, நீர்த்தேக்கங்கள் முதலியவை இல்லாததும், மனதிற்கு இனிய

தும், காற்று அதிகமாக வீசாததுமாகிய இடத்தில் யோகம் பழக வேண்டும். பனி, புகை, வெயில், காற்று, நெருப்பு, மின்மினி, மின்னல், ஸ்படிகம், நிலவு ஆகியவற்றின் தோற்றம் யோகமார்க்கத்தில் ஏற்படுவது பிரம்மசாட்சாத்காரத்தின் முன்னேற்றம் ஆகும்.

சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்த தன்மாத்திரைகளின் உணர்ச்சி யோகத்தின் பயனாக ஏற்படும்போது யோகசித்தி ஏற்படுகிறது. யோகாக்கினியால் புடம் போடப்பட்டதைப் போன்ற உடலை அடைந்த யோகிக்கு நோயில்லை, மூப்பில்லை, மரணமில்லை.

உடலின் பளுவின்மை, நோயின்மை, அவாவின்மை, நிறத்தெளிவு, நல்ல குரல், இனிய மணம், மலஜலங்களின் குறைவு யோகமுயற்சியின் ஆகியவை முதல் அடையாளங்கள்.

மண்ணால் மூடப்பட்டிருந்த ஒரு விக்கிரகம் தேய்த்துச் சுத்தப்படுத்திய பிறகு ஒளிவிட்டுப் பிரகாசிப்பது போலவே ஆத்மதத்துவத்தைக் கண்டுகொண்டதும் உடலில் உறையும் ஜீவன், பரமாத்மாவுடன் ஒன்றுபட்டவனாவும், பரிபூரண நிலையை எய்தியவனாகவும், துன்பம் நீங்கியவனாகவும் ஆகிறான். அப்போது பிறப்பற்றவரும், மாறுபட்டவரும், பிரகிருதி தத்துவங்களால் தொடரப்படாமல் சுத்தமாக இருப்பவருமாகிய பகவானை உணர்ந்து, ஒருவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகிறான். இந்தப் பகவான் எல்லாத் திசைகளையும் வியாபிப்பவன், ஆதியில் தோன்றிய ஹிரண்ய கர்ப்பன், கருவினுள் இருப்பவன், பிறந்தவையும் இனிப் பிறக்கப்போகும் உயிர்களும் இவனே; இவனே எல்லா உயிர்களிலும் எங்கும் முகமுடையவனாக இருக்கிறான்.

## 3

எவன் இந்த உலகம் முழுவதையும் தன் சக்தியால் ஆள்கின்றானோ அவன் பிரத்யகாத்மாவாக எல்லா உயிர்களிலும் உறைகிறான். உலகங்களைச் சிருஷ்டித்துக் காப்பவனாக இருந்து முடிவுக் காலத்தில் அவற்றைத் தனக்குள் ஒடுக்கிக்கொள்கிறான். எங்கும் கண்ணும் எங்கும் வாயும் எங்கும் கையும் எங்கும் காலும் உடையவன் அவன். 'மகிமை பொருந்தியவனும், சூரியனைப் போல ஒளி மிக்கவனும், இருளுக்கு அப்பாற்பட்டவனுமாகிய அந்தப் புருஷனை நான் அறிவேன். அவனை அறிந்த பிறகுதான் ஒருவன் சாவைக் கடந்து செல்லுகிறான். மோட்சத்திற்கு வேறு வழி இல்லை' என்று ரிஷி கூறுகிறார்.

எது முன்பு இருந்ததோ, எது இனிமேல் வரப்போகிறதோ, எது இப்போது காணப்படுகிறதோ அது எல்லாம் இந்தப் பரமபுருஷனேதான். எல்லா இந்திரியங்களின் குணங்களிலும் பிரகாசிப்பவனும், ஆனால் இந்திரியங்கள் எவையும் இல்லாதவனும், அனைத்திற்கும் மேம்பட்டவனும், அனைத்தையும் ஆள்பவனும், அனைத்திற்கும் புகலிடமாகவும் நண்பனாகவும் இருப்பவனும் அவனே. ஒன்பது வாயில்களுள்ள உடலில் வசிப்பவனாக, ஹம்சத்தைப் போலப் பற்றின்றி, வெளியுலகில் அவன் விளையாடுகிறான். அவன் கையில்லாமல் பிடிப்பவனாகவும், காலில்லாமல் வேகமாய்ச் செல்பவனாகவும் இருக்கிறான்; கண்ணில்லாமல் பார்க்கிறான்; காதில்லாமல் கேட்கிறான்; அறிய வேண்டியதை அவன் அறிகிறான்; ஆனால் அவனை அறிபவன் எவனுமில்லை. அணுவுக்கு அணுவாகவும், பெரியதிற்குப் பெரியதாகவும் உள்ள அவன் ஆத்மாவாக இந்த ஜீவனுடைய இதயகுகையில் மறைந்து உறைகிறான். ஆசை நீங்கியவன் உள்ளத்தெளிவால் ஆத்மாவைக் கண்டு சோகமற்றவன் ஆகிறான்.

[மூன்று அத்தியாயங்களின் சாரம் மட்டும் இந்த இதழில் தரப்பட்டுள்ளது. அடுத்த இதழில் ஏனைய மூன்று அத்தியாயங்கள் இடம் பெறும்.]

---

வெல்லக்கட்டி எவ்வளவு பெரியதாக இருக்கிறதோ அது முழுவதும் இனிப்பாகவே விளங்குகிறது. கர்ப்பூரக்கட்டி எவ்வளவு இருக்கிறதோ அது முழுவதும் எப்போதும் வாசனைமயமாக உணரப்படுகிறது. அது போல இந்த உலகம் முழுவதும் ஒரே சைதன்ய சொருபமாகவே விளங்குகிறது. இந்த உலகம் அழிந்த பின்பு ஆத்மவஸ்துவைத் தவிர வேறு ஒன்றுமே இல்லாததனால் உலகம் உள்ள காலத்திலும் ஆத்மசொரூபம் ஒன்றே உள்ளதாகக் கொள்ள வேண்டும்.

—லகுசதஸ்லோகி





# நமது தாய்நாடு

சுவாமி விவேகானந்தர்

1

தனி ஒரு மனிதனே அல்லது ஒரு நாடோ மற்றச் சமூகத்தினரிடமிருந்து விலகி நின்று வாழ முடியாது என்பதை மனப்பூர்வமாக நம்புகிறேன். ஒருவருக்கு ஒருவர் கொடுப்பதும் வாங்குவதும்தான் இயற்கையில் உள்ள விதியாகும். இந்தியா மீண்டும் ஒரு முறை தன் உயர்ந்த நிலையை அடைய விரும்பினால், அது தன்னிடமுள்ள அரும் பெரும் ஆன்மிகப் பொக்கிஷங்களை வெளியே கொண்டு வந்து ஏனைய உலக நாடுகளிடையே பரப்பியாக வேண்டும். அதற்குப் பதிலாக மற்ற நாடுகள் கொடுப்பதையும் பெறத் தயாராக இருக்க வேண்டும். இது முற்றிலும் இன்றியமையாததாகும்.

விரிந்துகொண்டே போவதுதான் வாழ்க்கை. குறுகிச் செல்வதை மரணம் என்றுதான் சொல்ல வேண்டும். அன்புதான் வாழ்க்கையாகும். வெறுத்து ஒதுக்குவதை மரணம் என்றுதான் சொல்ல வேண்டும். என்றைய தினம் மற்ற இனத்தவர்களை நாம் வெறுக்க ஆரம்பித்தோமோ, அன்று முதலே நாம் இறந்துபோகத் தொடங்கிவிட்டோம் மலர்ந்து விரிவதாகிய வாழ்க்கைக்கு நாம் திரும்பிச் செல்லாவிட்டால், நமது அழிவை எதுவுமே தடுத்து நிறுத்த முடியாது.

2

பாமர மக்களைப் புறக்கணித்து ஒதுக்கியதுதான் நமது நாடு செய்த பெரும்பாவம் என்று நான் கருதுகிறேன். நமது வீழ்ச்சிக்கான காரணங்களில் இதுவும் ஒன்றாகும். இந்தியாவின் பாமர மக்களுக்குச் சிறந்த கல்வியையும், நல்ல உணவு வசதிகளையும் கொடுத்து, அவர்களை நன்றாகக் கவனிக்க வேண்டும். அந்தப் பாமர மக்கள்தாம் நம்முடைய கல்விக்கு வரியாகப் பணம் தருகிறார்கள். அவர்களே நமது கோயில்களையும் கட்டுகிறார்கள். ஆனால் அவற்றுக்குப் பதிலாக அவர்களுக்குக் கிடைப்பதோ வெறும் உதைகள்தாம். நடைமுறையில் அவர்கள் நம் அடிமைகளாகவே இருக்கின்றார்கள். இந்தியாவை முன்னேற்றமடையச் செய்ய விரும்பினால், இந்தப் பாமர மக்களுக்காக நாம் வேலை செய்தாக வேண்டும்.

3

இந்துக்கள் தங்களுடைய கடந்த கால வரலாற்றை ஆழ்ந்து படிக்கும் அளவிற்கு ஏற்ப, அவர்களின் எதிர்காலம் மேலும் மேலும் பெருமைக்கு உரியதாக அமையும். யார் ஒருவர் இந்தியாவின் கடந்த காலப் பெருமைகளை வீடுதோறும் கொண்டு சென்று போதிக்கிறாரோ, அவரே நம் தாய்நாட்டிற்கு மிகப் பெரிய அளவில் நன்மை செய்தவராவார். இந்தியாவின் வீழ்ச்சி, பண்டைக் காலத்தில் நிலவிய சட்டங்களும் பழக்க வழக்கங்களும் தவறானவையாக இருந்த காரணத்தால் ஏற்பட்டுவிடவில்லை. மாறாக, அவற்றுக்கு உரிய நியாயமான முடிவு கிட்டும் வரையிலும் அவற்றைக் கடைப்பிடிப்பதற்கு அனுமதி அளிக்கப்படாத காரணத்தால்தான் இந்த வீழ்ச்சி ஏற்பட்டிருக்கிறது.

4

செய்து முடிக்கப்பட வேண்டிய பணிகள் மிகவும் ஏராளமாக இருக்கின்றன. ஆனால் அவற்றை நிறைவேற்றி முடிப்பதற்கான வசதிகளோ இந்த நாட்டில் இல்லை. நம்மிடம் அறிவு இருக்கிறது; ஆனால், பணி புரிவதற்கான கைகள்தாம் இல்லை. நம்மிடம் வேதாந்தக் கருத்துக்கள் இருக்கின்றன; ஆனால் அவற்றை நடைமுறைப் படுத்துவதற்கு உரிய ஆற்றல் இல்லை. நமது நூல்களில் உலக சமத்துவம் பற்றிய கொள்கை கூறப்பட்டிருக்கிறது; ஆனால் நடைமுறை வாழ்க்கையிலோ நாம் பெரு மளவுக்கு வேற்றுமை பாராட்டுகிறோம். இதே இந்தியாவில்தான், மிக உயர்ந்த, சுயநலமற்ற பயன் கருதாத பணியைக் குறித்த உண்மைகள் போதிக்கப்பட்டன; ஆனால் நடைமுறையில் நாம் மிகவும் கொடூரமானவர்கள்; இதயம் இல்லாதவர்கள். நமது

சதைப்பிண்டமாகிய உடலைத் தவிர வேறு எதைப் பற்றியுமே நினைக்க முடியாதவர்கள்.

செல்வச் செழிப்பை இழந்து, அதிர்ஷ்டத்தை இழந்து, பகுத்தறிவையும் அறவே இழந்து, நசுக்கப் பட்டு, என்றைக்கும் பட்டினியால் வாடியபடி, சண்டை சச்சரவுகளில் ஈடுபட்டவர்களாகவும் பொறாமை கொண்டவர்களாகவும் உள்ள இந்த இந்திய நாட்டு மக்களை, யாரேனும் ஒருவர் மனப் பூர்வமாக நேசித்தால், இந்தியா மீண்டும் விழித்துக் கொள்ளும் என்று நான் கூடத்தான் நம்புகிறேன்

எப்போது, பரந்த இதயம் படைத்த நூற்றுக் கணக்கான ஆண்களும் பெண்களும் வாழ்க்கை யின் ஆடம்பரங்களையும் எல்லா இன்பங்களையும் துறந்துவிட்டு ஆதரவற்ற நிலை, அறியாமை ஆகிய நீர்ச்சுழலில் சிறிது சிறிதாக மிகக் கீழ்நிலைக்கு மூழ்கிச் சென்றுகொண்டிருக்கும் நம் நாட்டுக் கோடானுகோடி மக்களின் நல்வாழ்விற்காக வருந்தித் தங்களின் முழு ஆற்றலையும் செலுத்தி உழைக்க முன்வருவார்களோ, அப்போதுதான் இந்தியா விழித்தெழும்.

## 5

இந்தியாவிலுள்ள எல்லாத் தீமைகளுக்கும் அடிப்படை வேராக அமைந்துள்ளது இந்த நாட்டு ஏழை மக்களின் இழிந்த நிலையே ஆகும். மேலை நாட்டு ஏழை மக்களைப் பேய்கள் என்றுதான் சொல்ல வேண்டும். அவர்களோடு ஒப்பிட்டால் நம் நாட்டு மக்களைத் தேவதூதர்கள் என்றே சொல்ல வேண்டும். ஆகவே, இவர்களின் நிலையைச் சுலப மாக உயர்த்திவிடலாம். அவர்களுக்குக் கல்வியை அளித்து, அவர்கள் இழந்துவிட்ட தனித்தன்மையை வளர்த்துக்கொள்ளும்படி செய்வதே இப்போது நாம் அவர்களுக்குச் செய்யவேண்டிய ஒரே சேவை யாகும்.

## 6

கடந்த எழுபத்தைந்து ஆண்டுகளாக இந்தியா வில் சீர்திருத்த மன்றங்களும், சீர்திருத்தக்காரர் களும் நீர்க்குமிழிகளைப் போலத் தோன்றிக்கொண் டிருக்கிறார்கள். ஆனால் அந்தோ! அவர்களில் ஒவ்வொருவரும் தோல்வியே அடைந்திருக்கின் றனர். சீர்திருத்தத்தின் இரகசியம் எங்கே இருக் கிறது என்பது அவர்களுக்குத் தெரியாமற் போய் விட்டது. அவர்களுக்கு இருந்த அவசரத்தில் நமது சமுதாயத்திலுள்ள எல்லாத் தீமைகளையும் மதத்தின் மேலேயே அவர்கள் சுமத்திவிட்டார்கள். தன் நண்பனின் நெற்றியிலே உட்கார்ந்த கொசுவைக் கொல்வதற்காக ஒருவன் முயற்சி செய்தான். அவன் கொடுத்த பலமான அடிகள் மனிதனையும் கொசுவையும் சேர்த்தே கொன்றுவிட்ட கதையைப் போல, இந்தச் சீர்திருத்த முறைகளும் அமைந்து விட்டன. ஆனால், இந்த முயற்சியில் அதிர்ஷ்ட வசமாக அசைக்க முடியாத ஒரு பெரிய பாறையின் மீதே மோதிக்கொண்டார்கள். மோதலினால் ஏற் பட்ட அந்த அதிர்ச்சியே அவர்களை நசுக்கி அழித்துவிட்டது. சுயநலம் இல்லாத, உயர்ந்த, ஆனால் அதே சமயத்தில் தவறான வழியில் சென்ற அந்தச் சீர்திருத்தக்காரர்களின் புகழ் வாழட்டும். உறங்குகிற கும்பகர்ணனை எழுப்புவதற்கு, அந்தப் பெரிய அதிர்ச்சிகளெல்லாம் தேவைப்பட்டன. ஆனால், அந்த முயற்சிகள் எல்லாம் அழிவுவேலை களைச் சேர்ந்தவையே ஆகும்; ஆக்கப்பணிகள் ஆகிவிடா. இந்தக் காரணத்தால்தான், அந்த முயற்சிகள் எல்லாம் நிலைத்து நிற்கக் கூடியவை அல்ல. எனவேதான் அவை யாவும் அழிந்து போயிருக்கின்றன. நாம் அவர்களை வாழ்த்துவோ மாக. அவர்களின் அனுபவத்தின் மூலமாக நாம் பயனடைவோம். நீ கிழக்கு, மேற்குத் திசைகள் எல்லாவற்றிலும் முயற்சிசெய்து பார். இந்து என்னும் இனம் முற்றிலும் அழிந்து மறைந்து, அதற்குப் பதிலாக வேறு ஒரு புதிய இனம் அந்த இடத்துக்கு வரும் வரையிலும், இந்தியா அழிந்து மறையும் வரையிலும், இந்தியா ஒருபோதும் ஐரோப்பாவாக ஆகிவிடாது.

## 7

இதை நீ கவனத்தில் வைத்துக்கொள்: ஆன்மிக இலட்சியத்தைப் புறக்கணித்துவிட்டு, மேலைநாட்டு லௌகிக நாகரிகத்தின் பின்னால் நீ செல்வாயா னால், அதன் விளைவாக மூன்றே தலைமுறைகளில் உனது இனம் அழிந்துபோய்விடும். ஏனென்றால், நமது நாட்டின் முதுகெலும்பு முறிந்து, எந்த அடிப்படையின் மீது நமது நாட்டின் கட்டிடம் எழுப்பப்பட்டுள்ளதோ, அந்த அடித்தளம் ஆட்டம் கண்டுவிடும். நாலா பக்கங்களிலும் அழிவைத்தான் நீ காண்பாய்.

## 8

எனது சகோதரர்களே! நாம் அனைவரும் கடுமை யாக உழைப்போமாக. உறங்குவதற்கு இது நேரமில்லை. எதிர்கால இந்தியா நமது உழைப்பைப் பொறுத்துத்தான் அமைந்திருக்கிறது. இந்தியத்தாய் தயாராகக் காத்திருக்கிறாள். அவள் உறங்கிக் கொண்டு மட்டும்தான் இருக்கிறாள். எழுமின்! விழிமின்! இந்த நமது தாயகமாகிய தேவி, தனது அழிவற்ற அரியணையின் மீது புத்திளமை பெற்ற வளாக, முன்பு எப்போதுமே இருந்ததைவிடவும் அதிகமான மகிமை கொண்டவளாக அமர்ந்திருப் பதைக் காணுங்கள். *




# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600004

## 1979 பிப்ரவரி மாத நிகழ்ச்சிகள்

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜயந்தி விழா:

28-2-79 புதன் — ஜன்ம திதி: விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் முதலியன. (காலை 5 மணி முதல் 11-30 மணி வரை)

மாலை 7-00 மணி — சொற்பொழிவு (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)
பொருள்: பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்வும் வாக்கும்.

ஸ்ரீ ராமகிருஷ்ண ஜயந்தி பொதுவிழா மார்ச் மாதத்தில் நடைபெறும்.

சத் சங்கம்: ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 8 மணி வரை.

மாலை 4 மணி முதல் 4-20 வரை ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம் (4-2-79 & 18-2-79)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (11-2-79)

மாலை 4-30 மணி முதல் 5-30 மணி வரை சொற்பொழிவு (தமிழ்)

1. ஸ்ரீமத் பாகவதம்—திரு 'அண்ணு' (11-2-79)
2. ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாமம் – திரு வி.ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (4-2-79)
3. ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாமம்— திரு வி.எஸ்.வி. குருசாமி சாஸ்திரிகள் (18-2-79)

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சொற்பொழிவு (ஆங்கிலம்)

1. பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர்—சுவாமி தபஸ்யானந்தர் (18-2-79)
2. ஸ்ரீமத் பகவத்கீதை—சுவாமி கபீரானந்தர் (4-2-79 & 11-2-79)

வாரநாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்—(மாலை 5-45)

வழக்கம் போல் ஒவ்வொரு நாளும் நடைபெறும்

சனிக்கிழமைகளில் மாலை 5-45 மணிக்கு

1. ஸ்ரீமத் பாகவதம் - திரு பி. ராமகிருஷ்ணன் (3-2-79)
2. ஸ்ரீ மத் ராமாயணம் டாக்டர் என். விழிநாதன் (24-2-79)
3. பஜனை (10-2-79 & 17-2-79)

விசேஷ தினங்கள்:

11-2-79 ஞாயிறு: அந்தர்யோகம் (சாதனை தினம்)

18-2-79 ஞாயிறு: சுவாமி அத்புதானந்த ஜயந்தி

25-2-79 ஞாயிறு: மகா சிவராத்திரி
(இரவு 8 மணி முதல் விசேஷ பூஜை, பஜனை முதலியன நடைபெறும்)

7-2-79 & 23-2-79 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு வழக்கம்போல் ராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

18-2-79 ஞாயிறு: சியாம நாம சங்கீர்த்தனம் (மாலை வழிபாட்டிற்குப் பிறகு)

மடத்தைச் சேர்ந்த சாதுக்களால் சென்னை நகரத்தில் மற்ற நிகழ்ச்சிகள் வழக்கம் போல் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி: 71281

தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.

